" ஞானசம்பந்தம் "

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 43 | 10-3-84 | இதழ் 4

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர்

## அருள்வாக்கு

ஏருத விண்ணப்பங் கூறுநின்
 தேதெனிற்கேள்; [றேன் அஃ
மாருமல் இந்த மகாலிங்கந்
 மகிழ்ந்திருந்தே [தன்னின்
ஆருப் பவத்துயர் ஆற்றிச் சிவா
 அன்பர்க்கென்றும் [னந்தம்
பேருக நல்குதி மாமது ராபுரிப்
 பிஞ்ஞகனே.

—சொக்கநாதக் கலித்துறை 5

ஆசிரியர் :-

வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :-

மகாவித்துவான்
சி. அருணைவடிவேல்முதலியார்

## உட்பொருள்





ஆண்டுச் சந்தா உள் நாடு ரு. 12
ஆண்டுச் சந்தா சிலோன் ரு. 35
ஆண்டுச்சந்தாவெளிநாடு ரு. 35
ஆயுள் சந்தா உள் நாடு ரு. 125
ஆயுள் சந்தா வெளிநாடு ரு. 350

உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

| மலர் 43 | ருத்ரோத்காரி - மாசி - 10—3—84 | இதழ் 4 |
|---|---|---|


திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே.

— ஞானசம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

# கம்பருக்கோர் கலைக்கோயில்

## பொருத்தமான முயற்சி :

என்றுமுள தென்தமிழ் இயம்பி இசை கொண்ட கவிச் சக்கரவர்த்தி கம்பருக்கு, அவர் பிறந்த தேரழுந்தூரில் தமிழ் நாடு அரசு 'கம்பர் கோட்டம்' ஒன்றை அமைக்க முன் வந்திருப்பது தமிழ்மக்களுக்கு மகிழ்ச்சி தரும் செய்தியாகும். அறநிலையத்துறையின் சார்பில் சுமார் பன்னிரண்டு லட்சம் ரூபாய்ச் செலவில் கம்பருக்குக் கலைக்கோயில் அமைவது பாராட்டத்தக்க முயற்சியாகும். சொற்கோயில் சமைத்து, இராமபிரானை நம்நெஞ்சில்நிறுத்திய காப்பியப்புலவர் கம்பருக்கு அவர்பெயர்கொண்ட தமிழக இந்நாள்முதல்வர், தேரழுந்தூரில் கற்கோயில் அமைத்துக் கம்பரை எழுந்தருள்விப்பதும், முந்தைய அரசு சென்னையில் அறநூலாசிரியருக்கு வள்ளுவர் கோட்டம் அமைத்ததும் பொருத்தமாகவே அமைகிறது.

**நடைமுறைச் சித்திரம் :**

தமிழ்ப்புலவர் பலராயினும் கம்பரையும் திருவள்ளுவரையும் இணைத்து இவர்களே தமிழுக்குக் 'கதி' என்று கூறும் வழக்கு ஒன்று உண்டு. ஏனையோருக்கு இல்லாது இவ்விரு பெருமக்களுக்கு மட்டும் நினைவுக் கோட்டம் எழுப்பப்பெறுதலில் ஒரு சிறப்பு இல்லாமல் இல்லை. திருவள்ளுவருக்கும் கம்பருக்கும் இடைப்பட்டகாலம் ஒரு ஆயிரம் ஆண்டுகளாகும். என்றாலும் திருக்குறளை நெஞ்சில் ஏந்தி, வள்ளுவர் வழி ஒரு சமுதாயத்தை உருவாக்கவேண்டுமென்ற எண்ணத்தைத் தம் காப்பிய வாயிலாக வெளிப்படுத்துகின்றார் கம்பர். அறக்கோட்பாடுகளின் மேல்வரிச்சட்டமாகத் திகழும் திருக்குறளுக்குக் காப்பியவழியில் ஓர் நடைமுறைச் சித்திரத்தைத் தீட்டிக்காட்டி வாழ்வு தந்த பெருமை கம்பருக்கு உரியது. இவை வலிந்து கொள்ளப்பட்ட நயப்பாட்டு ஒப்புமை அன்று. அடிப்படைச் சான்றுகளுடன் கூடிய மறுக்க வியலாத உண்மை.

**சங்க இலக்கிய உள்ளீடு :**

சங்க கால இலக்கியங்களின் நோக்கும் உள்ளீடும், திருக்குறளின் நோக்கும் உள்ளீடும் முற்றிலும் வேறுபாடுடையன. சங்க இலக்கியங்கள் நடைமுறை வாழ்வின் சித்திரங்கள். எது மன்னர்களுக்கு விருப்பமோ? எவை மக்களுக்கு மகிழ்ச்சியூட்டுவனவோ அவற்றை அழகுறப் பதிவு செய்தனர் சங்கப்புலவர்கள். 'சிறியகள் பெறினே எமக்கீயும் மன்னே' எனப் பெண்பாற் புலவர்களும் 'மயக்கும் கள்ளுண்டலை' மகிழ்ச்சிப் பெருமிதத்தோடு போற்றினர். புலால் உண்டலைப் புகழ்ந்தே புனைந்தனர். மருதநிலப் பரத்தையர் சேரியும், தலைவன் அங்கே சென்று மீளும் திறமும், குலமகளின் ஊடல் திறமும் கற்பனை அழகோடு கவிதைகளாயின. கற்பின் முதற்பிரிவாகப்பரத்தையர் பிரிவு, இலக்கண நூல்களாலும் ஏற்றுப்போற்றப்பெற்றது.

**எதிர்நீச்சல் இலக்கியம் :**

ஒருகாலமக்கள்சமுதாயத்தின்ஒட்டுமொத்தமானகேளிக்கை வாழ்வை, நடைமுறை விருப்பங்களைக் கண்டித்து எதிர்நீச்சல் இலக்கியம் ஒன்றைத் திருவள்ளுவர் படைக்கிறார். சங்க இலக்கியங்களோடு திருக்குறளை ஒருங்கு நிறுத்திக் காண்பார்க்கு வள்ளுவரின் புரட்சிநோக்கு புலப்படாது போகாது. ஒரு சமுதாயத்தின் விருப்பங்களைப் பாடுதல் எளிது. நடைமுறை விருப்பங்கள் கேடு என்பதனை உணர்ந்து, பெரும்பான்மைச் சமுதாயத்தின் விருப்பத்துக்கு மாறாகக் குரல் கொடுக்கத்

துணிவதே ஒரு தீரம். வள்ளுவர் வெற்றிபெற்றுரா என்பது நமது ஆய்வின் நோக்கமன்று. சமூகத் தீமைகளைத் 'தீமை' என்று உணர்ந்தும், அதனை வெளிப் படுத்தத் துணிவற்ற அப்பாவி மக்கள் கூட்டத்திலிருந்து திருவள்ளுவர் வேறுபடுகிறார் எனக்காட்டுவதே நோக்கம். 'உண்ணற்க கள்ளை' என்றும், புலாலை, அது 'பிறிது ஒன்றன் புண்' என்றும், பரத்தை உறவை, 'ஏதில் பிணந்தழீஇயற்று' என்றும், சமூகத்தில் வரைவின் மகளிர் என ஒரு பகுப்பே கூடாதென்றும் வடித்தெடுத்த திருவள்ளுவரைப் புரட்சிச் சிந்தனையாளராகக் கருதுவதில் தவறேதும் இருக்க முடியாது.

## குற்றத்தின்பரிசு :

இலக்கியங்கள் - அவை எத்தனை உன்னதமாயினும் அவற்றைக் கலைக்கண்கொண்டு சுவைக்கவும், ரசிக்கவும் மட்டுமே தமிழர்கள் முன் வந்தனர். இலக்கியம் காட்டும் உயர்நெறிகளை, ஒழுக்கக் கூறுபாடுகளைப் பின்பற்ற வேண்டுமென்ற எண்ணம் நம்மவர்களிடம் இருந்ததற்குச் சான்றேதும் இல்லை. திருக்குறளுக்கு ஒன்றுக்குப் பத்தாக நயவுரை எழுதி மகிழ்ந்த தமிழர் இனம், திருவள்ளுவர் காட்டும் ஓர் அறநெறிச் சமுதாயத்தை நடைமுறைப் படுத்திப்பார்க்க முனைந்ததாகக் குறிப்புக்கள் கிடைத்தில. திருக்குறளை ஒத்த உயர்ந்த அறநெறிக் கோட்பாடுகளை வேறு இனத்தவர் பெற்றிருந்தால் மகத்தான வாழ்வியலாக அதனை நடைமுறைப்படுத்தியிருப்பர். வள்ளுவர் வழிவந்த தமிழகத்தில் காணப்படும் அறச்சிதைவுகள், நம் குறளை நடைமுறை வாழ்வுக்குக் கொண்டுவரத் துணியாத குற்றத்தின் பரிசுகளேயாகும்.

## ஆடவர் கற்பு :

கம்பர், ஓராயிரம் ஆண்டுக்காலத்தில் திருத்தமுறாத தமிழ்ச் சமுதாயத்தை நெறிப்படுத்த எண்ணுகின்றார். வள்ளுவர் வகுத்த அறக்கோட்பாடுகளைக் கதை வடிவில் பாமரர்நெஞ்சிலும் பதிய வைக்க விரும்புகின்றார். வான்மீகி வடித்த இராமன் கதை அவர் கருத்தில் வருகிறது. நினைத்திருந்தால் தமிழ் மண்ணின் கதை ஒன்றைக் கம்பரால் தேர்ந்தெடுத்திருக்க முடியும். இங்கே "ஒருத்திக்கு ஒருவன்" என்ற நீதி பேசப்பட்டதே அன்றி "ஒருவனுக்கு ஒருத்தி" என்ற நீதிவற்புறுத்தப்பெற்ற வரலாறே இல்லை. "இந்த இப்பிறவிக்கு இருமாதரைச் சிந்தையாலும் தொடேன்" என்று, வள்ளுவர் விழைந்த பண்பாட்டு ஆண்மைக்குத் தமிழகத்துக் கதைகளிலே நாயகர்கள் இல்லை. மனித இராமனை வான்மீகியிடம் பெற்று, வள்ளுவர் விழைந்த அறநெறிக் கோட்பாடுகளை இராமன் வாக்கிலும் வாழ்விலும்

தவழவிட்டு அவனைத் தெய்வமாக உயர்த்திக் காட்டுகின்றார் கம்பர்.

**கம்பரின் கனவு :**

பத்தாயிரத்துக்கும் மேம்பட்ட பாடல்களில் நூற்றுக்கும் மேலான வள்ளுவர் சிந்தனைகளைப் பதிவுசெய்யும் கம்பரைக் கவி உளம் காண்பாரால் இனங்காண இயலும். "இவன் தந்தை என்னோற்றான் கொல்" எனும் சொல்லுக்கு இலக்கணமாக தசரத குமாரனைப் படைத்து வளர்த்துவரும் கம்பரின் காவியத்தில் இராமனின் வாழ்வு வள்ளுவமாக மலர்கின்ற அற்புதத்தைக் காணமுடிகிறது. உலகநேயம், வருணாசிரம சாதி பேதங்களைக் கடந்த ஒருமை, பகைவனுக்கும் அருளும் பேராண்மை, ஒருத்தியோடு வாழ்ந்து நிறைவுகாணும் உயர்பேர் ஒழுக்கம் இவற்றின் கூட்டுக்கலவையாக இராமனைப் படைத்து, காவிரிநாட்டில் எல்லாரும் எல்லாப்பெருஞ்செல்வமும் எய்தி, இல்லாரும் இல்லை உடையாரும் இல்லை என்ற நிலைவர விழையும் கம்பரிடம் திருவள்ளுவரின் முழுமையான தாக்கத்தையே தரிசிக்க முடிகிறது.

**அறமே ஆள்க !**

திருவள்ளுவர்வழி ஒரு நடைமுறைச் சமுதாயம் அமைய விழைந்த கம்பர் பிறந்த தேரழுந்தூர், சைவ வைணவ இணக்கத்திற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்ந்திருந்தது. கரிகாலன் பிறந்த பெருமை மிக்க தேரழுந்தூர், சோழவேந்தர்களுக்கு மகட்கொடை நல்கும் வேளிர்களின் வாழ்விடமாகவும் விளங்கியது. திருஞானசம்பந்த சுவாமிகளாலும் (2-20) திருமங்கை மன்னராலும் (பெரியதிருமொழி 7, 8) போற்றிப்பாடப்பெற்ற புனிதமண் இது. இங்கேபிறந்து அறஞ்சான்ற உலக இலக்கியம் ஒன்றைப் படைத்து வழங்கிய கம்பருக்கு, அரசு கலைக்கோயில் ஒன்றை எழுப்பிச் சிறப்பிப்பது பாராட்டற்குரியது. இரண்டு நாள் தமிழறிஞர்களும், அமைச்சர் பெருமக்களும் பங்கேற்க நடைபெறவிருக்கும் கால்கோள் விழாவில் தருமையாதீனம் இருபத்தாளுவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பாமாசாரிய சுவாமிகளும் எழுந்தருளி அருளாசி வழங்கவிருப்பது விழாவிற்கு அணிசேர்ப்பதாக அமையும். கம்பர்கோட்டம் விரைவில் அமையவும், கம்பர் வடித்த கலைக்கோயிலில் அறம் எழுந்தருளியிருந்து ஆட்சிசெய்யவும், 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' என்ற கம்பர் வாக்கு மலரவும் "ஞானசம்பந்தம்" வரவேற்று வாழ்த்துகின்றது.

---

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

திருவாரூர் திருக்கோயில் திருப்பணியைத் தொடங்கிவைத்து

வழங்கியருளிய

# ஆசியுரை

23—1—1984

" உயிரா வணமிருந் துற்று நோக்கி
உள்ளக் கிழியினுரு வெழுதி
உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தால்
உணரப் படுவாரோ டொட்டிவாழ்தி
அயிரா வணமேறு தானே றேறி
அமரர்நா டாளாதே ஆரூராண்ட
அயிரா வணமேயென் னம்மா னேநின்
அருட்கண்ணால் நோக்காதார் அல்லா தாரே "

## இறங்கிவந்த இறைவன் :

திருவாரூர் மூலாதாரத்தலம். "மூலாதாரத்தின் மூண்டெழு கனலைக் காலால் (காற்று) எழுப்பும் கருத்தறிவித்து" என்பது ஔவையாரின் யோகநெறியுணர்த்தும் உயரிய வாக்கு. இந் நெறியைச் சுந்தரர்க்கு உணர்த்தி வாழ்வித்த தலம் திருவாரூர். அப்பர் இக்கருத்தையே "உயிராவணமிருந்து" என்ற திருத் தாண்டகத்தால் வலியுறுத்துகின்றார். மூச்சுக் காற்றை அடக்கி, யோகநெறியில் நின்று, உள்ளமாகிய திரையில் இறைவனுடைய திருவுருவத்தை எழுதி, உயிரை இறைவனிடத்து, என்றும் மீளா அடிமை என்று ஓலை எழுதி, உன்கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம் என்று ஒப்படைத்தால், அங்ஙனம் உணரப் படுவாரோடு ஒட்டி உடனுய் வாழ்ந்துநிற்பவன் இறைவன். இரண்டாயிரம் கோடுகளை உடைய அயிராவதம் என்னும் வெள்ளானையைவாகனமாகக்கொள்ளாது, ஆனேற்றை வாகன மாகக்கொண்டு, தேவர்கள் உலகை ஆளாது, திருவாரூரை ஆட்சி

செய்யவந்தவனே தியாகராஜப்பெருமான், இத்தகைய இறைவன் அடியார்களின்பொருட்டு தேவலோகமாகிய இன்ப உலகைத் துறந்து, இன்பத்துன்பங்கள் கலந்தமண்ணுலகு நோக்கி வந்தவர் ஆதலின் அவர் தியாகராஜர் எனப்பெற்ருர். நடனத்திற்கு ஒரு ராஜா நடராஜா! இவர் தில்லையிலே காட்சிதருகின்ருர். தியாகத்திற்கு ஒரு ராஜா தியாகராஜா! இவர் திருவாரூரிலே அருள்வழங்குகிருர், இவரிடம் நாம் தியாகத்தை ஒருசிறிதேனும் கற்றுக்கொள்வோம்.

## சோமாஸ்கந்தமூர்த்தியின் அருள் வரலாறு :

இப்பெருமான் மண்ணுலகுக்குவந்த வரலாறு ஒன்றுண்டு, கந்தபுராணத்தில் இவ்வரலாறு வருகின்றது. திருமால் மகப் பேறின்மையால் சிவபெருமானை நோக்கி ஓர் ஊழிக்காலம் கடுந் தவம்செய்தார். சிவபெருமான் உமாதேவியாரோடு தோன்றி யருளினுர். திருமால் அவரைவணங்கிவழிபட்டார், சிவபெருமான் அவருக்கு மகப்பேறுகிடைக்க வரம் அருளினுர். அப்பொழுது உமாதேவியார் தன்னைவணங்காத திருமாலைநோக்கி, நீ பெறும் மகன் எம்பெருமான் கோபத்தால் விரைவில் அழிவான் என்று சினந்து சபமிட்டார்.

திருமால் அதனைக்கேட்டு மிகவும்வருந்திச் சாபவிமோசனம் வேண்டி, சிவபெருமான், உமாதேவியார், முருகக்கடவுள் ஆகிய மூவரையும் ஒருங்கேகொண்ட சோமாஸ்கந்தமூர்த்தியின் திரு வுருவத்தை அமைத்து வழிபட்டுவந்தார். பல ஆயிரம் கோடி ஆண்டுகள் கடுந்தவம் இயற்றினுர். அப்பொழுது சிவபெருமான் உமாதேவியாரோடு தோன்றியருளி, உமையை நோக்கி, திருமாலுக்கு அருள்புரிகஎன்ருர். உமையும்திருமாலின் பத்தியைப்பாராட்டி, நீபெறும் மகன் முன்சாபப்படி இறப்பினும் பின்னே உயிர்பெற்றெழுவான் என்றருளினுர். பின்னேதிருமால் திருப்பாற்கடலில் பள்ளிகொண்டு தன் நெஞ்சகத்தில் சோமாஸ்கந்த மூர்த்தியின் திருவுருவத்தை வைத்து வழிபட்டு வந்தார். தேவேந்திரன் பின்னர் அம்மூர்த்தியைத் திருமாலிடம் பெற்று வழிபட்டுவந்தான். மண்ணுலகைஆண்டுவந்த முசுகுந் தச் சக்கரவர்த்தியின் உதவி, வலன் என்னும் அவுணனை அழிக்க இந்திரனுக்குத் தேவைப்பட்டது. சங்காரம் முடிந்த வுடன் முசுகுந்தனுக்குச் சன்மானம்செய்ய எண்ணிய இந்திரன் என்னவேண்டுமோ கேள் தருகிறேன் என்ருன், தியாகேசராகிய சோமாஸ்கந்தமூர்த்தி முன்பே முசுகுந்தனிடன் அறிவித்திருந்த படி முசுகுந்தன் சோமாஸ்கந்தமூர்த்தியைத் தனக்குத்தரும்படி விரும்பிக்கேட்டான். தேவேந்திரன் திருமாலிடம் பெற்றுவந்த

மூர்த்தியாதலால் திருமாலிடம்தெரிவிக்கிறேன்; அவர்தரச்சொன்னால் தருகிறேன்என்று பதில்கூறினான். திருமாலின் அனுமதியின்படி முசுகுந்தச்சக்கரவர்த்தி தேவேந்திரனிடம்வந்து தெரிவிக்க இந்திரன் வழிபட்டுவந்த சோமாஸ்கந்தமூர்த்தியைக் கொடுக்க மனமில்லாது அதேபோன்று ஆறு மூர்த்திகளைத் தெய்வத் தச்சனைக்கொண்டுசெய்வித்து, முசுகுந்தனிடம்ஒவ்வொன்றாய்க் கொடுக்க, முசுகுந்தன் இறைவனருளால் அவ்வாறையும்வாங்கி இவர் அவரல்லர் என்றுகூற, இந்திரன் வேறுவழியில்லாமல் இதுகாறும் வழிபட்டுவந்த சோமாஸ்கந்தமூர்த்தியை அளித்து, திருவாரூர் முதலான தலங்களில் இவ்வெழுவரையும் வைத்துப் பூசிப்பாயாக! என்றுவிடைகொடுத்துஅனுப்பினான். முசுகுந்தன் அந்த ஏழுமூர்த்திகளையும் கொண்டுவந்து, இந்திரன் வழிபட்டு வந்தமூர்த்தியைத் திருவாரூரிலும், ஏனைய ஆறையும் திருநாகைக் காரோணம், திருநள்ளாறு, திருக்காறுயல், திருக்கோளிலி, திருவாய்மூர், திருமறைக்காடு என்னும் ஆறு தலங்களிலும் ஒரே நாளில் தாபித்து வழிபாடு செய்வித்தான். இம்மூர்த்திகள் விடங்கர் என்று அழைக்கப் பெறுவர். விடங்கர் என்றால் உளியால் செதுக்கப்படாதவர் என்பது பொருள். எனவே இவ்விடங்கர் எழுந்தருளியுள்ள தலங்கள் சப்த விடங்கத் தலங்கள் என்று குறிக்கப் பெறும். அவற்றுள் முக்கியத்தலம் திருவாரூர்.

## கீழைக்கோபுரக்குறை :

இந்திரன் தான் பூசித்த கடவுளை முசுகுந்தனுக்குக் கொடுத்ததால் இந்திரனைப் பாவம் பற்றியது. விண்ணுலக அரசை இழந்து, புலையன் வடிவு தாங்கி ஐராவதத்தின் மீது ஏறித் திருவாரூரை அடைந்தான். அங்குக்கீழைக்கோபுரத்தின்வழியே அவன் வந்து வழிபடவந்ததால் நீசத்துவம்பட்டது என்றுகருதி அக்கோபுரவழியாக இன்றும் தியாகராசர் உலா வருவதில்லை என்றும், திருக்கதவு இன்றும் திறக்கப்படுவதில்லை என்றும் அறிய முடிகின்றன. பின்னர் பல்லாண்டுகள் தேவேந்திரன் தியாகராசரைத் திருவிழாக்காலங்களில்வழிபட்டுத் தன்புலையுன் வடிவு நீங்கி இறைவன் அருளால் தேவராசவடிவுபெற்று விண்ணுலகை அடைந்து ஆட்சிபுரிந்தான் என்பது பழைய வரலாறு.

## மூன்று நிலையில் இருந்தருளும் மூர்த்தி :

ஆண்டவன் போக மூர்த்தியாக இருந்து உயிர்களுக்குப் போகத்தையும், யோக மூர்த்தியாக இருந்து உயிர்களுக்கு யோகத்தையும், வேக மூர்த்தியாக இருந்து உயிர்களுக்கு

வீரத்தையும் அருள்கின்றார். போக மூர்த்தி சோமாஸ்கந்த மூர்த்தி; யோக மூர்த்தி தெட்சிணாமூர்த்தி; வேக மூர்த்தி கால சம்ஹாரமூர்த்தி, சரபமூர்த்தி போன்ற மூர்த்திகள். இக்கருத்தைச் சிவஞான சித்தியார்,

" போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரித லோரார்
யோகியா யோக முத்தி யுதவுத லதுவு மோரார்
வேகியா னாற்போற் செய்த வினையினை வீட்ட லோரார்
ஊகியோ மூட ரெல்லாம் உம்பரி லொருவ னென்பார் "

என்று இயம்புகிறது. இங்கே இருக்கும் சோமாஸ்கந்த மூர்த்தியைச் சோமவாரத்தில் வழிபாடு செய்பவர்கள் சகல இன்பங்களும் பெற்று நன் மகப்பேறும் அடைந்து நலமுறுவர்.

## பொலிவுகுன்றிய கோயில் :

இந்திரன் உலகத்தில் எழுந்தருளியிருந்த தியாகராசர் - முசுகுந்தச் சக்கரவர்த்தியைக் காரணமாகக் கொண்டு இம் மண்ணுலகு வந்தருளினார். இங்கு வழிபாடும் பூஜைகளும் சிறப்புற நடைபெற்று அதனால் உயிர்கள் ஈடேற்றம் பெறுதல் வேண்டும் என்ற கருணையால் இங்கு எழுந்தருளினார். ஆனால் இன்று இத்திருக்கோயில் பொலிவுகுன்றிய, வழிபாட்டுச்சிறப்புக் குறைந்து இருக்கிறது. இது எல்லோருக்கும் துன்பங்களை அளிக்கும், ஆதலின் அன்பர்கள் தன்னலம் கருதியாவது திருக் கோயிலில் வழிபாடுகள் சிறக்க அவரவர்களும் இயன்றதை மனமகிழ்ச்சியுடன் செய்து ஆண்டவன் திருவருளைப் பெறுதல் நல்லது.

## ஆரூர்த்திருக்கோயிலின் ஆன்ற பழமை :

இத்திருக் [illegible] கப் பழமையானது. இதனைப் பூங் கோயில் என்று அழைப்பர். ஊரின்பெயர் ஆரூர்; கோயிலின் பெயர் பூங்கோயில் எனப்பெறும். இதுபோன்று பல ஊர்களில் ஊரின் பெயர் ஒன்றாகத் திருக்கோயிலின் பெயர் ஒன்றாக வழங்குவதைக் காணலாம். ஊரின்பெயர் கருவூர்; அங்கு இறைவன் எழுந்தருளியிருக்கும் கோயில் ஆனிலை என்று அழைக்கப்பெறும். அதேபோன்று திருவெண்ணெய்நல்லூரில் இறைவன் எழுந்தருளியிருக்கும் இடம் திருஅருட்டுறை என்று வழங்கப்பெறும். பூங்கோயில் எத்துணைப் பழமையானது என்பது குறித்து அப்பரடிகள் ஒரு பாடல் அருள்கின்றார்.

"ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ
ஓருருவே மூவுருவ மான நாளோ
கருவனாய்க் காலனைமுன் காய்ந்த நாளோ
காமனையும் கண்ணழலால் விழித்த நாளோ
மருவனாய் மண்ணும் விண்ணும் தெரித்த நாளோ
மான்மறிக் கையேந்தியோர் மாதோர் பாகம்
திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே"

இப்பாடலில் இறைவனின் பல அருட்செயல்களை எடுத்துக் கூறி, இவை அனைத்தும் நிகழ்ந்தநாளோ அல்லது அவற்றிற்கும் முன்னோ அல்லது பின்னோ? பெருமானே! தேவரீர் இவ் வாரூரைத் திருக்கோயிலாகக்கொண்ட நாள்? என்று அப்பர் பெருமான் கேட்பது இத்திருக்கோயிலின் பழமையையும் அதன் சிறப்பையும் எடுத்துக்காட்டுவதாகும்.

இத்தகைய புராதனக் கோயில் அமைந்துள்ள இவ்வூர், சோழர்களால்முடிசூடிக்கொள்ளும் இடங்கள் ஐந்தில் ஒன்றாகக் கொண்ட சிறப்புடையது. கருவூர், உறையூர், பூம்புகார், சேய் ஞலூர், ஆரூர் என்பன அவ்வூர்கள்.

## திருப்பணியில் பங்குபெறுவீர் :

இத்திருக்கோயில் திருப்பணிகள் சோழர்களாலும், பாண்டி யர்களாலும் செய்விக்கப்பெற்றுள்ளன. இங்கே அமைந்துள்ள ஆயிரக்கால்மண்டபம் தேவாசிரியமண்டபம்என்று அழைக்கப் பெறும் சிறப்புடையது. இம்மண்டபத் திருப்பணியினை நகரத் தார் பல்லாண்டுகட்கு முன்பே புதுப்பிக்கத் தொடங்கினர். அப்பணியும் நிறைவு பெறாமல் நிற்கிறது.

புராதனச் சிறப்பும், அப்பர், ஞானசம்பந்தர், சுந்தரர் என்னும் அருளாளர்கள் பலரும் வதிந்தும் வழிபட்டும் வந்த சிறப்பும், ஆண்டவனே விருப்பிவந்துதங்கியபுனிதமும்உடைய இத்திருக்கோயில் இன்று பொலிவுகுன்றிநிற்பது நம் எல்லோ ருக்கும் நல்லதல்ல. இதில் நடக்க இருக்கும் திருப்பணிகளில் அன்பர்கள் தங்கள் பங்கினைச் செலுத்தி, ஆண்டவனின் பூங்கோயில் பூங்கோயிலாக அழகுற விளங்கத் துணை புரிந்து அருள் பெறுவார்களாக.

"எந்தைதான் எனைஎன்றுகொளுங்கொலோ" என்று ஞான சம்பந்தரும், "தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் நமக் குண்டுகொலோ" என்று அப்பரும், "ஆரூரவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்" என்று சுந்தரரும் அச்சத்துடனும் அன்புட னும் வழிபட்ட பெருமைமிக்கது இத்திருக்கோயில் என்பதை உணர்ந்து வழிபடுவோமாக.

## ஆரூரும் ஆதீனமும் :

இத்திருக்கோயிலில் தில்லை நடராஜர் கோயிலைப் போலவே பல கட்டளைகளால் பூசை முதலியன நடைபெறுகின்றன. இராஜன் கட்டளை, அபிடேகக்கட்டளை, அன்னதானக்கட்டளை போன்ற 13 கட்டளைகள் இன்றும் நடந்துவருகின்றன.

இராஜன் கட்டளை தருமபுர ஆதீனத்தின் ஆட்சிக்குட் பட்டது. தருமை ஆதீனத்திற்கும் இவ்வூருக்கும் ஒரு தொடர்பு உண்டு. ஆதீனகுருமுதல்வர் ஸ்ரீகுருஞானசம்பந்தருக்கு இவ்வூர் குருக்ஷேத்திரம் ஆகும். இவ்வூரில் திருக்கயிலாயமரபில்வந்த ஸ்ரீ கமலைஞானப்பிரகாசரிடம் உபதேசம் பெற்ற ஸ்ரீ குருஞான சம்பந்தரால் தோற்றுவிக்கப் பெற்றதே தருமை ஆதீனம். ஆதலின், தருமை ஆதீனத்திற்கும் இது குருக்ஷேத்திரமே ஆகும். கமலைஞானப்பிரகாசரின் சிறப்பை அறிந்த தஞ்சை மன்னர்களும், விஜயநகர வேந்தராகிய கிருஷ்ணதேவராயரும் இவ்வருளாளருக்கு அளித்த இறையிலி நிலங்களே இராஜன் கட்டளை என்று வழங்கப்பெற்று வருகிறது. பல்லாண்டு களாக இக்கட்டளையிலிருந்து ஆரூர்ப் பெருமானுக்குச் சிறப்பு வழிபாடுகளும், நாள் வழிபாடுகளும் நடைபெற்றுவருகின்றன. இந்த இராஜன்கட்டளை அன்றுமுதல் வழிவழியாகத் தருமபுர ஆதீனம் ஆட்சியில் இருந்துகொண்டு புற்றிடங் கொண்ட பெருமானின் திருக்கோயிலுக்குப் பல்வேறு திருப்பணிகளைத் திட்டமிட்டு நிறைவேற்றி உள்ளது.

## இராசன்கட்டளைத் திருப்பணி :

தருமையாதீனம் பன்னிரண்டாவது குருமூர்த்திகள் ஆட்சிக் காலத்தில் இராஜன்கட்டளை, கட்டளை விசாரணையிலிருந்த முத்துக்குமார சுவாமித் தம்பிரான் முயற்சியால் பல்லாண்டு களாக ஓடாதிருந்த திருவாரூர்த் திருத்தேர் கி. பி. 1820 இல் ஓடவிடப்பெற்றது. பதினேழாவது குருமூர்த்திகள் ஆட்சிக் காலத்தில் திருவாரூர் இராஜன்கட்டளை, கட்டளை விசாரணையாக விளங்கிய அருணசலத் தம்பிரான் முயற்சியால் திருவாரூர்த் திருக்கோயில் தெற்குக் கோபுரத் திருப்பணி நிறைவு செய்யப் பெற்று கி. பி. 1897 இல் குடமுழுக்கு நிகழ்த்தப்பெற்றது. இப் பொழுது நடைபெறும் இத்திருக்கோயில் திருப்பணியில் நமது ஆதீனம் இராஜன் கட்டளையின் சார்பில் தெற்குக் கோபுரத் திருப்பணியினைச் செய்தும், தோரணவாயில் அமைத்தும் திருப்பணிசெய்ய எண்ணியுள்ளோம். தியாகேசன் திருவருளால்

சாகுபடிதாரர்களின் மனம் திருந்தவும், வருவாய் பெருகவும் திருப்பணி நிறைவுறவும் திருவருளைப் பிரார்த்திக்கின்றோம். ஒவ்வொரு கட்டளையின் பரம்பரை அறங்காவலர்களும் அவர வர்கள் நிலைக்கேற்ப திருப்பணியில் பங்குபெறுதல் அவசியம். இவ்வூரைச் சுற்றி வாழும் செல்வந்தர்களும், பிறரும், தங்கள் தங்கள் நிலைக்கேற்பத் திருப்பணியில் பங்குபெறுதல் இன்றிய மையாதது. நாம்வாழும் பகுதியிலுள்ள ஒருபுராதனத் திருக் கோயில் திருப்பணியில் நாமும் ஏதேனும் ஒருபங்கினைச் செய்து அப்பணியில்சேர்ந்து கொள்ளுதல் நம்கடமை என்றுஒவ்வொரு வரும் கருதுதல் அவசியம். திருக்கோயில்கள் நன்ருக இருந்தால் தான், அங்கு வழிபாடுகள் நலமுடன் நிகழ்ந்தால்தான் நாம் அனைவருமே நலமும் வளமும் பெற்றுச் செழிப்புடன் வாழ இயலும் என்பதை அனைவரும் எண்ணிப்பார்த்து இப்பணியில் பங்கு பெற்றுப் பயனடைவார்களாக.

**பணி தொடங்கத் துணை நிற்போர் :**

இத்திருக்கோயில் அறங்காவலர் குழுவின் தலைவர் அன்பர் ஆற்றல்மிக்க திரு. சு. தென்கோவன் அவர்கள் இத்திருப்பணிக் குழுவின் தலைவராக இருந்து இத்திருப்பணி விரைவில் நிறை வேறப் பெரிதும் முயன்றுவருகிருர்கள். அவருடன் உள்துறைக் கட்டளைப் பரம்பரை அறங்காவலர் திரு. V. T. சோமசுந்தர முதலியார், அன்பர் திரு. R. தட்சிணமூர்த்தி முதலியார், நிர்வாக அலுவலர் திரு. கண்ணபிரான், வர்த்தகர்கள், வர்த்தகர்சங்கத் தலைவர் முதலியோர் ஆர்வத்துடன் முயன்று பங்குபற்றி வருகிருர்கள். இவர்கட்கெல்லாம் நமதுபாராட்டும் வாழ்த்தும் என்றும் உரியன.

**வாழ்த்து :**

இத்திருப்பணி விரைவிலும் எண்ணிய எண்ணியாங்கும் நிறைவேறி, இறைவனின் திருக்கோயில் கும்பாபிடேகம் சிறப் புடன் நிகழவும், இப்புண்ணியப் பணியில் பங்குபெறும் அன்பர்கள் அனைவரும் நலம்பலபெற்று நீடு வாழவும் எல்லாம் வல்ல செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

திருப்பணி செய்வீர் !

திருவருள் பெறுவீர் !

# கொற்றவை வழிபாடு

புலவர் திரு. மு. வைத்தியநாதன்
உயர்நிலைப்பள்ளி தமிழாசிரியர், திருச்சிராப்பள்ளி.

கொற்றம் என்னும் பழந்தமிழ்ச்சொல்லுக்கு வெற்றிஎன்பது பொருளாகும். வெற்றியையுடைய அரசன், 'கொற்றவன்' எனப்பெறுவான். கொற்றத்தால் வந்த பந்தர், 'கொற்றப்பந்தர்' எனப் பெறும். வெற்றி தரும் பெண் தெய்வம் 'கொற்றவை' என்று அழைக்கப்பெறுவாள். 'கொற்றவை' பழந்தமிழ் நாட்டு மக்கள் வழிபட்ட வெற்றித் தெய்வம் ஆவாள்.

பழந்தமிழ் வீரர்கள், பகைவர்மேல் போர் தொடுத்துச் செல்லுமுன், தங்களுக்கு வீரமும் வெற்றியும் விளைய வேண்டிக் கொற்றவையை வழிபட்டுள்ளனர். போர் முடிந்து வெற்றி வாகை சூடிய பின்னரும், அவளைப் போற்றிப் பரவியுள்ளனர். தங்களின் வீரம், வெற்றி அனைத்திற்கும் கொற்றவையின் அருள் வேண்டும் என்பது அவர்கள் நம்பிக்கை. தங்கள் உள்ளத்தில் திறுகண்மையாம் வீரத்தைவிளைவித்து வளர்ப்பவள் கொற்றவை அன்னைதான் என்பதும், அவளே, தம்மைத் தூண்டி நடத்துவிக்கிறாள் என்றும் உறுதியாக நம்பி வழிபட்டுள்ளனர்.

கொற்றவை அறிவொளியுடன் விளக்கும் வடிவம் உடையாள் என்றும், அரிமா எழுதிய அழகிய கொடியைக் கையில் ஏந்தியவள் என்றும், பசிய நிறமுடைய கிளியை, அழகிய கலைமானை ஊர்தியாக உடையவள்என்றும், வெற்றிவேல் விளங்கும் தடக்கையாள் என்றும், இடப்பாதத்தில் சிலம்பும், வலப்பாதத்தில் வீரக்கழலும் அணிந்தவள் என்றும் அவளுடையபாதங்கள் மெல்லிய சிறிய பூம்பாதங்கள் என்றும், தமிழ் நூல்கள், கொற்றவை அன்னையின் வடிவ அழகை விளக்குகின்றன.

வெற்றித் தெய்வமாம். கொற்றவைஅன்னையை வெட்சி மறவர்கள் துடி என்னும் தோற்கருவி எறிந்து, விழா எடுத்து வழிபட்டதாகத் தொல்காப்பியம் கூறுகின்றது.

> " மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த
> கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே. "

(தொல் – பொருள்; 59)

கொற்றக் களிற்றின் கொம்பினை அறுத்து, அதனாற் செய்த அழகிய கட்டிலில், கொற்றவையை எழுந்தருளச் செய்து குருதிப் பலி கொடுத்து, வீரம் விளைவித்த மன்னர்கள், கொற்றவைக்கு வழிபாடு செய்ததாகப் பதிற்றுப்பத்து தெரிவிக்கிறது. (பதிற்றுப்பத்து 79.)

முல்லை நிலத்து வேடர்கள், கொற்றவைத் தெய்வத்திற்குப், பாலையும் கிளியும் கானக்கோழியும் மயிலும் கொண்டு சென்று நேர்த்திக்கடன் செய்துள்ளனர். குறிஞ்சி நிலம் வாழ் எயினர்கள் வண்ணமும், சுண்ணமும், சாந்தமும் புழுக்கலும் நோலையும் விழுக்குடை மடையும், பூவும் புகையும், விரையும் படைத்து மகிழ்ந்துள்ளனர்.

அன்னையின் திருவுருவத்தின் முன் வீர மறவர்கள் ஒன்று கூடி ஆறெறி பறையும், சூறைச் சின்னமும், கோடும் குழலும் மணியும் ஒலித்து, ஆடிப் பாடி மகிழ்ந்துள்ளனர். வெற்றிப்படை யுடைய கொற்றவையின் அருளைப் புறப்பொருள் வெண்பா மாலை ஆசிரியர் ஐயனாரிதனார் புகழ்ந்து போற்றி, அவளது அருள் இயல்பு உரைத்துள்ளார்.

" ஒளியின் நீங்கா விறற்படையோள்
அளியின் நீங்கா அருளுரைத் தன்று

என்பது அவர் வாக்கு. மேலும், கொற்றவை நிலைக்கு இலக்கணம் கூறுமிடத்து, படையெடுத்துச் செல்லும் அரசன் வெற்றி பெறவேண்டும் என்றும், அவன் பகைவரைப் புறங்காண வேண்டும் என்றும் வீரர்கள் கொற்றவையை வழிபடுவதே 'கொற்றவைநிலை' என்று விளக்கியுள்ளார்.

" நீடோளான் வென்றிகொள்கென நிறைமண்டை வலனுயரிக்
கூடாரைப் புறங்காணும் கொற்றவைநிலை யுரைத்தன்று "

(புறப்பொருள் வெண்பாமாலை.)

கொற்றவைக்கு வீரமறவர்கள், எட்கசிவும், நெற்பொரியும், அவரை துவரையும், அவலும், நிணமும் குடரும், குருதியும் ஆகியன நிறைத்து, மண்டையினையும் பூதகணங்களையுமுடைய அவளுக்குப் படைத்து மகிழ்ந்ததாகவும், பகைகெட வேண்டியதாகவும் அந்நூல் விளக்கியுள்ளது.

" அணங்குடை நோலை பொரி புழுக்கல் பிண்டி
நிணங்குடர் நெய்த்தோர் நிறைத்துக் — கணம்புகலக்
கையிரிய மண்டைக் கணமோடி காவலற்கு
மொய்யிரியத் தான்முந் துறும் "

( புறப்பொருள் வெண்பாமாலை )

முருகனைக் கொற்றவைக்கு மகன் என்கிறது. நக்கீரரின் திருமுருகாற்றுப்படை.

" மலைமகள் மகனே ! மாற்ரேர் கூற்றே !
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ "

( திருமுருகு - 257 - 258 )

நெடுநல்வாடை என்னும் பத்துப்பாட்டு நூல், தோழிப் பெண்கள், தலைவியின் பொருட்டுக் கொற்றவையை வேண்டிக் கொள்ளும் பகுதியை விளக்குமிடத்து, " கொற்றவைத்தாயே ! தலைவனின் பிரிவு ஆற்றிக்கொள்வதற்கு அரியதாக இருக்கிறது. அதனால் தலைவனுக்குச்சிறந்த வெற்றியைக்கொடுத்து, உடனே மீண்டு புறப்பட்டுவரும்படி அருள்செய்வாய் என்றும், "இப் பொழுதேபலரொடு முரணிய பாசறைத்தொழிலை" விட்டு, 'நின் தலைவிபாற் செல்க' என்று அனுப்பிவைப்பாய் என்றுவேண்டிய தாகத் தெரிவிக்கிறது.

" இன்னா அரும்படர்தீர விறல்தந்து
இன்னே முடிகதில் அம்ம" (நெடுநல்வாடை வரி-168)

சேரமன்னர்கள் கொற்றவையை வழிபடும் பெருங்கடன் உடையவர்கள் என்பது பதிற்றுப்பத்தால் அறிய வருகிறது. அவர்கள், நிறம் படு குருதிப் புறம்படின் அல்லது, மடையெதிர் கொள்ளாக் கடவுளாகிய கொற்றவையை, அவள் உறையும் அச்சம் தரும் * அயிரைமலைக்குச் சென்று பரவுக்கடன் செய்த தாக அந்நூல் தெரிவிக்கிறது. இதை

" உருகெழு மரபின் அயிரை பரவும்
அஞ்சுவரு மரபின் கடவுள் அயிரை நிலைஇ "

( பதிற்றுப்பத்து : 90-19 )

என்னும் அந்நூற்ருெடரால் அறியலாம்.

தலைவன் பொருள்தேடுதல் காரணமாகப் பிரிந்து சென்றுள் ளான். அப்பொழுது அவனைப் பிரிந்து வாழும் பெண், தன் தோழியர்களுடன், மலையடிக்கத்துக்குச் சென்று, கொற்ற வைக்குப் பலியிட்டு, 'தலைவன் தீங்கு எதுவும் இல்லாமல்

---

* அயிரை என்பது திருச்சி மாவட்டத்துள்ள ஐயர்மலை ( சிவாயம் ) என்று அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

திரும்பி வரவேண்டும்' என்று வேண்டிய செய்தியைக் குறுந்தொகை விளக்கியுள்ளது.

தோழியொருத்தித் தலைவியைநோக்கி, தலைவனின் வரவு தீங்கின்றி அமைய, மலையடுக்கத்தில் நாம் சூலிக்கு நேர்த்திக்கடன் செய்யவேண்டியது இன்றியமையாதது. என்று கூறி அழைக்கிருள். தலைவி, பிரிந்த கணவனைக்கூடும் ஆர்வத்தால், அதனை ஏற்றுச்செய்கிருள். இதை,

" விடர்முழை யடுக்கத்து விறற்கெழு சூலிக்குக்
கடனும் பூணும் "

( குறுந்தொகை : 218 )

என்ற தொடரால் அறியலாம்.

சித்திரச்சிலம்பில் வரும், கவுரி, சமரி, சூலி, நீலி, மாலின் தங்கை என்னும் பெயர்கள் யாவும் கொற்றவையை உணர்த்துகின்ற பெயர்களே ஆகும். இளங்கோவடிகள் கொற்றவையை, நஞ்சுண்டும் சாகாதவள் என்றும், எல்லாம் உணர்ந்தவள் என்றும், பெரிய காட்டில் வாழ்பவள் என்றும், பேய்க்கூட்டங்களை உடையவள் என்றும் புகழ்ந்து போற்றியுள்ளார்.

சங்கநூல்கள் வழியாக அறியக் கிடக்கும் இக்கொற்றவை வழிபாடுதான் பிற்காலத்துச் 'சக்தி வழிபாடாகப்' பரவிப் பெரிதாக வளர்ச்சி அடைந்துள்ளது.

---

# தேசபக்தி

( துளசிஜயா வாண்டையார். )

" உழைத்துச்சம்பர்திக்கவேண்டும்என்ற எண்ணம் எல்லோருக்கும் வரவேண்டும்; வளரவேண்டும். நாம் ஆடு மாடு அல்ல. மக்கள்கூட்டம். சிந்திக்கவேண்டும். நாம் உழைக்காமல் நாடு உயராது. நாட்டின் சுதந்திரம் நம்மால் கெடாமல் பார்த்துக்கொள்ளவேண்டும். நாடு என்னுடையது. இந்த மண் எனக்குச்சொந்தமான மண். இதற்கு விரோதமாக நடக்கமாட்டேன் என்று ஒவ்வொருவரும் உறுதிகொள்ளவேண்டும். "

நன்றி. -தினமலர் (திருச்சி) 16-2-84

அறிக்கை எண் -5.

அனைத்துலக

## முதல் சைவசித்தாந்தக் கருத்தரங்கம்

# அறிவிப்பு



தருமையாதீனமும், திருச்சிராப்பள்ளி பாரதிதாசன்பல்கலைக் கழகமும் இணைந்து நடத்தும் அனைத்துலக முதல் சைவ சித்தாந்தக் கருத்தரங்கம் எதிர்வரும் **மேமாதம் 11, 12, 13 வெள்ளி, சனி, ஞாயிறு** ஆகிய மூன்று நாட்களும் தருமை யாதீனத்தில் சிறப்புற நடைபெறும். ஆதீனக் குருமுதல்வர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் குருபூஜைப்பெருவிழாவின் முதல்மூன்று நாட்களில் இக்கருத்தரங்கம் அமைவது குருவருட் சம்மத மாகவே அமைகிறது.

முன் அறிக்கைகளில் குறித்திருந்த அனைத்து ஏற்பாடுகளும் முறையாக நடைபெற்று வருகின்றன. ஏறத்தாழ அறுபது கட்டுரைகள் கருத்தரங்கில் படிக்கப்படவுள்ளன. இக்கட்டுரை களின் உள்ளீடுகள் யாவும் முறையாகத் தக்க அறிஞர்களைக் கொண்டு குறிப்புகள் தொகுக்கப்பெற்று அச்சாகிவருகின்றன. கருத்தரங்கில் பங்கேற்கும் சார்பாளர் மற்றும் பார்வையாளர் களுக்கு வழங்கப்படவுள்ளன.

கருத்தரங்க அமர்வுகள், தொடக்கவிழா நிகழ்ச்சி, ஏனைய கலாசார நிகழ்ச்சிகள் குறித்த முறையான மூன்றுநாள் விழா நடைமுறைகள் அச்சில் உள்ளன. "ஞானசம்பந்தம்" இதழில் இவை வெளியிடப்பெறுவதோடு, பார்வையாளர்களாகப் பதிவு செய்து கொண்ட அனைவருக்கும் தனித்தனியாகவும் அனுப்பப் பெறும். பார்வையாளர்களாகப்பங்கேற்க விரும்புவோர் உடன் ரூ. 30—00 செலுத்திப்பதிவு செய்துகொள்ளலாம். தமிழகத்தில் நடைபெறும் இம்மாபெரும் மூன்றுநாள் கருத்தரங்கில் தமிழ் மக்கள் பெரிதும் ஈடுபாட்டுடன் பங்கேற்பார்கள் என எதிர் பார்க்கிறோம். 20—4—84 க்குள் பார்வையாளர்கள் ரூ. 30—00 செலுத்தி தங்கள் பெயர்களைப் பதிவுசெய்துகொள்ளவேண்டும்.

தஞ்சாவூரில், விஸ்வ ஹிந்து பரிஷத் நடத்திய

ஏகாத்மதாயக்ஞ விழாவில்



தருமையாதீனம்

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்

அருளாசி வழங்கும் காட்சி

13—12—83

உ

# தித்திக்கும் புத்தாண்டு!

திரு. அரங்க. முத்துமணி
மாவட்டப் பதிவாளர் (தணிக்கை) தஞ்சாவூர் 613 001.

(வெண்பா)

அடியார் வரலாற்றை அன்பர்தம் நெஞ்சிற்
படியும் வகையாற் பகரும் — நெடியபுகழ்க்
கொண்ட குருமணிகள் கோலமார் பொன்னடிகள்
எண்ணித் தொழுதேன் இனிது!

(வேறு)

மக்களது வாழ்க்கையிலே அமைதி யில்லை;
மனமென்னும் கருவண்டு சென்று சென்று
திக்கெல்லாம் துன்பமெனும் பூக்கள் நாடித்
தேடுவதைக் காண்கின்றோம்; இன்பம் நல்கும்
மிக்கபுகழ் இறைவனது மலர்ப்பா தத்தில்
மிதக்கின்ற அருளமுதாம் தேனை மாந்திச்
"சிக்கெனவே பிடித்திட்டால்" வாசகர்போல்,
சிரமங்கள் தோன்றிடுமோ அருளாம் வாழ்வில்?

வருகின்ற இரத்தாட்சி யாண்டு தானும்
வழங்கிடுக நன்மைகளை; அறமே செய்யும்
திருத்தருமை யாதீனப் பூங்காவைப் போல்
திகழட்டும் இல்லங்கள்; வள்ளு வத்தின்
பெருவழியில் நாடுதான் நல் நடையே போட,
பீடுமிகு சைவந்தான் ஓங்க, நந்தம்
திருமுறைகள் தாங்கிட்ட தமிழும் வாழ,
தித்திக்கும் புத்தாண்டை வரவேற் கின்றோம்!

---

கட்டுரை எண். 46

# அபிராமி அந்தாதி

டாக்டர் புலவர் திரு. K. சந்தானராமன், M. A., B. Lit,
D. P. P. A., D, U. N., I. U.
பருத்தியூர்

**தொண்டு செய்யாது, நின் பாதம் தொழாது, துணிந்திச்**
**[ சையே**
**பண்டுசெய்தார் உளரோ? இலரோ? அப்பரிசு அடியேன்**
**கண்டு செய்தால், அது கைதவமோ? அன்றிச் செய்**
**[ தவமோ?**
**மிண்டு செய்தாலும் பொறுக்கை நன்றே, பின்வெறுக்கை**
**[ யன்றே!**

**அ. தொண்டு செய்யாது நின்பாதம் தொழாது துணிந்து இச்சையே பண்டு செய்தார் உளரோ? இலரோ?**

(1) நினக்குத் தொண்டு புரியாமலும், நின் திருவடியினை வணங்காமலும், தமக்குத் தோன்றிய வழியினையே 'நன்று' என்று துணிந்து, முற்காலத்தில் சில அடியார்கள் வழிபட்டிருக்கலாம். அதனை யான் அறியேன்.

(2) 'உளரோ இலரோ' என்பது "அப்படித் துணிந்து இச்சையே செய்தார்களோ இல்லையோ?" என்ற பொருளில் அவர்களது செயலைக் குறித்து நின்றது. பின் கண்டு செய்தல் என்று வருவதால் அவர்களது செயல்களையே குறித்தது என்பது தெளிவாகிறது. 'இலர்' எனின் அதனைக் கண்டு செய்யும் பேச்சே இல்லையாகும்.

(3) அதாவது முன் காலத்தில் சில அடியார்கள் வேத ஆகம நெறிகளைப் பின் பற்றாது, அல்லது தொன்று தொட்டு பின் பற்றப்படும் 'தாந்ரீக' நெறிகளையும் பின்பற்றாது, தமது விருப்பப்படி வழிபட்டு இறையருள் பெற்றதாக வரலாறுகள் உண்டு. அவர்களது தூய அன்பின் காரணமாகவும், உறுதிப் பாட்டின் காரணமாகவும், முன்வினைத் தொடர்பு காரண

மாகவும் அருளுக்குரிய பக்குவம் பெற்றுத் தமது இலக்கினை அடைந்து விடுகின்றனர். அவ்வரலாறுகளே 'பண்டு துணிந்து இச்சையே செய்த' செயல்கள் ஆகும்.

(4) 'சவ்ய – அபசவ்ய – மார்கஸ்தா' என்பது சகஸ்ர நாமத்தில் ஒன்று. அதாவது வலத்திலும், இடத்திலும் வழியிலும் இருப்பவள் என்றும், வலதுசாரி, மற்றும் இடதுசாரி மார்க்கங்களில் இருப்பவள் எனவும் குறிப்பிடுகிறது இந்த நாமம்.

வேத ஆகம நெறிப்படி வழிபடும் முறை 'சவ்ய' மார்க்கம் ஆகும். சிவகோசரியார் இயற்றிய சிவபூஜை சவ்யமார்க்கம். தாந்ரீகமாகவும் தன்னிச்சைப்படியும் செய்யும் பூஜை 'அபசவ்யம்' ஆகும். அதாவது 'சவ்யம்' அல்லாதது – வேத ஆகம மார்க்கத்தைச்சாராதது என்பது பொருள். கண்ணப்பரின் வழிபாடு இத்தகையது. இரண்டுமே இறைவனுக்கு உகந்ததுதான்.

(5) வேத ஆகம சாஸ்த்திரங்கள் எதனையும் அறியாத காளிதாசன் பண்டு துணிந்து இச்சையே செய்தவன் என்பது அனைவரும் அறிந்த செய்தியாகும். ஆயினும் அவனது உறுதிப்பாடும் அசையாத நம்பிக்கையும் அன்னையின் அருளுக்குப் பாத்திரமாக்கியது.

(6) காளிதாசனின் 'மறுபிறவி' என்று கருதப்படும் காஞ்சி மூககவி வேதநெறி அறியாது இச்சையே செய்திருந்து பின்னர் காமாட்சியின் அருள்பெற்றான்.

(7) அன்னையினை வழிபடக் கடினமான முறைகளைப் பின்பற்றவேண்டும் என்று சிலர் தவறாகக் கூறுவர். அவளது திருமந்திரத்தினை ஓத 'நியமங்கள்' பலவற்றையும் மேற்கொள்ள வேண்டுமென்றும், அவ்வாறு செய்யத் தவறினால் 'குலம்' அழியும் – 'குருதி வடியும்' என்றும் அச்சுறுத்துவர்.

ஆனால் அப்படி எதுவும் நிகழாது என்று தேவிபாகவதம் தெளிவாக விளக்குகிறது.

மனோரமை என்னும் மகாராணி தனது கணவனை இழந்து, பின் அவனது இரண்டாம் மனைவியால் நாடு கடத்தப்பட்டு விடுகிறாள். மனோரமையின் மகன் சுதர்சனன் என்பவன் தன் தாயுடன் காட்டில் வாழ்கிறான். அவனுடன் விளையாடும் சிறுவர்களில் ஒருவன் 'அலி' அவனை அனைவரும் 'க்லீபன்' என்று அழைப்பர். சுதர்சனனும் அவனை அடிக்கடி 'க்லீபன்' என்றே அழைப்பான். அப்பெயரில் ஏதோ ஒரு ஈடுபாடு ஏற்பட்டுவிட்டது. எப்போதும் 'க்லீபன், க்லீபன்' என்றே

சொல்லிவரலானன். முடிவு! அவனுக்கு அன்னையின் அருள் கிட்டிவிட்டது!

ஆம்! சுதர்சனன் அவளது 'பீஜாட்சரமாகிய 'க்லீம்' என்பதனை பல முறை ஜபித்துவிட்டான் என்று கருதி அவனை, சக்க இளவரசியுடன் இணைத்து மணம் முடித்து வைத்து, இழந்த நாட்டினையும் மீட்க அருள்பாலித்துவிட்டாள். 'உபதேசம்' 'நியதி' ஏதுமின்றி, தொண்டு செய்யாது, அவள் பாதம் தொழாது துணிந்து இச்சையே செய்த இளவரசன் பெற்ற 'பரிசினை' தேவிபாகவதம் புகழ்ந்து பேசுகிறது. அவள் அடியார் எம்முறையினைப்பின் பற்றினாலும் அருள்பாலிக்கிறாள்.

(8) 'பண்டு துணிந்து இச்சையே செய்தார்' என்பது மனம் போன போக்கில் நடந்து, இறைவனை மறந்துவிடும் மனிதர்களைக் குறிக்கவில்லை. உலக இயல்புக்கு மாறாகவும், நெறிமுறைகளுக்கு மாறாகவும் முற்காலத்தில் வழிபட்ட சில அடியார்களையே குறிக்கிறது என்பது தெளிவு.

## ஆ. அப்பரிசு அடியேன் கண்டு செய்தால் அது கைதவமோ? அன்றிச் செய்தவமோ?

(1) அவ்வடியார்களின் இயல்புகளை யான் கண்டு, பின் பற்றி, அதனையே செய்தால் அது வஞ்சனையாகுமா? (தாழ்வான தவநெறியாகுமா?) அல்லது உயர்ந்த தவநெறியாகுமா? அதனையும் அறியேன்.

(2) பாதகத்துக்குப் பரிசு பெற்ற சண்டேசுர நாயனார் வரலாற்றினைக் கருத்தில் கொண்டு இங்கு, 'பரிசு' என்பதற்கு 'சிறப்புப் பெறல்' எனப்பொருள் கொள்ளலாம். அவ்வடியார் கண்ட சிறப்பினை யானும் கண்டு அதனைப் பெற வெண்ணி அம்முறையினையே யானும் பின்பற்றினால் அது கைதவமா? அல்லது செய்தவமா? என அறியேன் என்கிறார்.

(3) முற்காலத்தில் காளிதாசன் போஜ ராஜனிடம் அமாவாசையினைப் பௌர்ணமி என்று கூறிப்பின் அதனை மெய்ப்பித்தான். வேலூரில் வாழ்ந்த இரத்னகேட தீட்சிதர் என்ற தேவி உபாஸகர் 'சின்னப் பொம்மன்' என்ற மன்னனிடம் அவ்வாறே அமாவாசையினைப் பௌர்ணமி என்று கூறிப்பின் அன்னையின் திருவருளை வேண்டி நிலவினை அழைத்துக் காட்டிய வரலாறும் முன்னமே நினைவு கூர்ந்தோம். பண்டு நிகழ்ந்த அப்பரிசினையே யானும் கண்டு இச்சரபோஜி மன்னனிடம் அவ்வாறு கூறியிருப்பின் அது செய்தவமா? அல்லது கைதவமா? அறியேன் என்கிறார்.

(4) கண்டு செய்யும் அச்செயல்கள் ' கால – தேச – வர்த்த மானங்களுக்கு ஏற்பவும், ஒருவரது பூர்வ ஜென்ம புண்ணிய பாவங்களுக்கு ஏற்பவுமே கைதவமாகவும், செய்தவமாகவும் அமையுமாதலால் கைதவமோ அன்றிச் செய்தவமோ என்றார். சில அடியார்களைப்போல் ' நடக்கவேண்டும் ' என்று தோன்று கின்ற எண்ணமே முன்செய்த புண்ணிய வசத்தினால் தோன்று மாதலால் ' செய்தவமோ ? ' என்றார். " அவர் செய்திருக் கிறாரே ? நான் ஏன் செய்யக்கூடாது ? " என்று விதண்டவாதத் துக்காகப் பின்பற்றுதல் பிழையாகலின் கைதவமோ ? என்றார்.

(5) கண்ணப்பன் ஒப்பதோர் அன்பினைக் ' கண்டு செய் தால் ' அது ' செய்தவம் ' எனத்தகும். வேத சாஸ்திரங்களை அறிந்தவர், திருமுறைகளைக்கற்றவர் ஒருவர் ' கண்ணப்பர்போல் எச்சில் உணவினைப் படைப்பேன் ' என்றால் அது விதண்டா வாதம். அல்லது கைதவம்.

(6) நமது வழிபாட்டுமுறை சிறந்ததா அல்லது தாழ்ந்ததா என்பதை தீர்மானித்து அருள்வது, நாம் வழிபடும் கடவுளின் வேலை. நாமாகப் பறைசாற்றுவது உகந்ததல்ல என்பதால் கைதவமோ? அன்றிச் செய்தவமோ? என்று வினவாக விடுக் கிறார்.

(7) இங்கு இரண்டு கருத்துக்களை நாம் தெளிவாக உணர்தல் வேண்டும். முற்காலத்தில் சிலஅடியார்கள் செய்தன வற்றை நமது கால தேச வர்த்தமானங்களுக்கு ஏற்பவே பின் பற்றவேண்டும் ஐயம் ஏற்படும் பொழுது தக்க ஞானாசிரியர் மூலம் தெளிவு பெறுதல் வேண்டும். மற்றொன்று, பிற அடியார் களின் வழிபாட்டு முறையினைக் குறைகூறுதலையும் தவிர்க்க வேண்டும். அவற்றின் தகுதியினையும் தரத்தினையும் தீர்மானம் செய்வது இறைவனின் திருவுள்ளமேயாகும்.

## இ. மீண்டு செய்தாலும் பொறுக்கை நன்றே, பின் வெறுக்கை அன்றே !

(1) அவ்வாறு நான் நெறிக்குமாறான செயல்களைச் செய் தாலும், நீ தமியேனை வெறுக்காது பொறுத்துக் காக்க வேண்டியது நன்றாகும்.

(2) மேற்கண்டவாறு சில அடியார்களின் செயல்களைக் கண்டு பின்பற்றும் பொழுது ஏற்படும் தவறுகளைப் பொறுக்க வேண்டியது உன் கடமை. ஏனெனின் நான் உன்னிடம் அடைக்கலமாகப் புகுந்துவிட்டேன். அவ்வாறு அடைக்கலம் புகுந்தபின் ' வெறுக்கும்தகைமைகள் ' செய்தவர்களை இறைவன் காத்த வரலாற்றினை அடுத்த பாட்டில் எடுத்துரைக்கிறார்.

(3) அபிராமிபட்டர் 'பர ஆகம பத்தி' யினையே என்றும் பண்ணினார் எனக் கண்டோம். வேதஞ் சொன்ன வழிக்கே வழிபட நெஞ்சுண்டு" என்பார் பின்பும், அப்படி யிருக்க அவர் என்ன மீண்டு செய்தார் ? விதிக்கு மாறானவற் றைச் செய்தார் ?

திருக்கோயில்களில் குறித்த நேரத்தில் ஆகம விதிப்படி, சோடச உபசாரங்களுடன் சிறப்பாக பூஜை நடைபெறுகிறது. நிறைவாக சிவாச்சாரியார் கற்பூரம் தீபாராதனை காட்டும் முன்பு, காலலோபம், நியமலோபம், சிரத்தாலோபம், திரவ்ய லோபம், மந்த்ரலோபம் முதலிய குறைபாடுகளைப் பொறுத்து நெறியான முறையான பூஜையாக ஏற்றுக்கொள்ளவேண்டியது என்று வேண்டுகிறார். நமதுபூஜையினை நாமே சிறப்பித்துப்பேசி அதனால் ஆணவம் எய்தாதிருக்கவும், அறியாமல்நிகழ்ந்துவிட்ட குறைகளைப் பொறுக்கவேண்டியுமே அங்ஙனம் முறையான பூஜை முடிவிலும் வேண்டப்படுகிறது. அவ்வாறே அபிராமி பட்டரும் முறையாக வழிபட்டவரே ஆயினும் அறியாமல் நிகழ்ந்துவிடும் குறைநீங்கவே இவ்வாறுவேண்டுகிறார். இதுவே பர ஆகம பத்தியின் ஓர் அம்சமாகின்றது. தெய்வவழிபாடு, குருவழிபாடு 'பித்ரு வழிபாடு' ஆகியவற்றில் ஏற்பட்ட குறை கள் நீங்குதல் இப்பாடலின் பாராயணபலன் ஆகும்.

---

## கடிதம் :

டாக்டர் கு. இராமலிங்கம் எம். டி.. சென்னை 600 024
41 – சாகுலர்சாலை,
யுனைடெட் இந்தியா காலனி.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் பொன்னார் திருவடி களுக்கு அடியேனது அன்பும், பணிவும் கலந்தவணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கின்றேன் இந்தமாத "ஞானசம்பந்தம்" பத்திரிக்கையைப் படித்தேன். அதில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நி தானம் தேசபக்தியும், தெய்வபக்தியும் என்ற தலைப்பில் பேசிய பேச்சு என்னை மிகவும் கவர்ந்தது. தேசிய ஒருமைப்பாடு பற்றியும் பேசியுள்ளது மேலும் மகிழ்ச்சியைத்தருகிறது. தெய்வ பக்தி, தேசபக்தி, தேசிய ஒருமைப்பாடு ஆகிய மூன்றும் தற்காலத்தில் மிக அவசியமானது. அதுவும் இளைஞர்களுக்கு மிகவும் தேவையானது. பிறகு திருச்சியில் ஒரு கிறித்தவக் குடும்பத்தினரை இந்து சமய நெறியில் சேர்த்துக்கொண்ட நிகழ்ச்சி, நமது பணியிலே ஒரு புதுமையையும், திருப் பத்தையும், முன்னேற்றத்தையும் குறிக்கின்றது.

# திருவருட்பாத் திரட்டு

( பொழிப்புரையுடன் )

**வித்துவான் திருமதி. ப. நீலா** எம். ஏ.,
தமிழ்ப்பேராசிரியை,
தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

( மலர் 43, இதழ் 3, பக்கம் 156 இன் தொடர்ச்சி. )

சுந்தர விபூதியணி சுமுக திரியம்பகா
துங்க சிவமே யனுதி
*சுயமே பிரகாசிக்கு மெய்ஞ்ஞான வம்பர
சொருப பரமானந்தனே
இந்து சேகர இடப வாகூட வீசுவேச
இருவருக் கரிய பொருளே
ஏகநாயக நாகபூஷண அன்றுமுதல்
என்னையாள் என்னப்பனே
அந்தகற் கந்தகா என்றென்று நிட்கள
அனந்த கல்யாண குணமாம்
ஆனந்த பரவசம தாகியே யெனதுவிழி
அமுதநீர் சொரிய வருவாய்
கந்தருவர் சித்தர் வித்யாதரர்கள் வீணையிசை
கேட்டு மகிழ் பரமசிவனே
கௌகாத ராகௌளரி பங்காள காசிவரு
கேதார நாத குருவே. 4

(பொ - ரை) கந்தருவ சித்த வித்யாதரர்களின் வீணையிசை கேட்டு மகிழும் மேலான சிவனே - கேதாரநாதனே! அழகான திருநீறணிந்த இனியமுக முடையவனே! முக்கண்ணனே! உயர்ந்த மங்கலப் பொருளே! இயல்பாக ஒளிவிடும் தொன்மை மிகு ஞானமாம் ஆடையணிந்த ஆனந்த வடிவுடையனே! பிறைசூடி! விடையேறி! பேரிறைவே! மாலயனுக்கு அரியவனே! ஒருவன் என்னும் ஒருவனே! அரவணிந்தவனே! பிறந்த நாளி லிருந்து என்னையாளும் எந்தையே! அனுதிகாலந்தொட்டே என்னையாளும் எந்தையே! கூற்றுவனுக்குங்கூற்றுவனே! என்று குற்றமற்ற வார்த்தைகளால் நினது மங்கல குணங்களைக்கூறி

* சுபமே - என்ற பாடம் இருக்கிறது - 1972ம் வருடபதி

மகிழ என்விழிகள் அமுதநீர் சொரியும்படி நீ எழுந்தருள்வாய்.

(க – து) எனையாட்கொண்டநீ இன்று என்முன் வந்தருள்க.

(கு – ரை) சுந்தர விபூதி-அழகைத்தருவதும் அழகானதும் திருநீறு. சுந்தரமாவது நீறு (சம்பந் 2 – 66 – 1) சுமுக – நல்ல முகம். ' சுபமே ' என இருப்பதைவிட ' சுயமே ' என இருப்பது பொருந்தும். சுயம்பிரகாசம் என வருவதே வழக்கம். அம்பரம்– ஆடை ' அம்பரமே தண்ணீரே சோறே ' – (திருப்பாவை - 17) ' ஏகநாயக ' ஒருவன் என்னும் ஒருவன் காண்க ' – திருவா – திருவண்ட - 43) அன்று முதல் – அனாதிகால முதலாகவே

" என்று நீ அன்று நான் உன் அடிமையல்லவோ "
— ( தாயுமானவர் – சுகவாரி – 8 )

, அன்றுமுதல் இன்றளவும் மேலும் அடியேனுக்கு
கென்றுநீ நன்மைசெய்வ தன்றிநான் — ஒன்றேனும்
செய்யுமா றெங்கன் சிவனே '
— (சொக் - வெண் - 88)

செம்பையம் பொன்னெனச் செய்குளிகை போலுனது
திருவடிகள் சென்னி வைத்தென்
சித்துருவ முற்றமல முற்றுந் துடைத்தருள்
தேசோ மயானந்தமாம்
அம்பர சொருப பரமானந்த அத்துவிதம்
ஆகஅருள் அகளங்கனே
அண்ட கோடிகள் அனந்தம் பரமவணு வென்னும்
அற்புதப் பேருருவனே
சம்புசங் கரமனோகர சதாசிவ லிங்க
சர்வ பந்தங் கடந்த
சர்வசு னியருளத் தனவரத சந்தோஷ
சச்சி தானந்த வடிவே
கிம்புரு டர்பந்தர் சுந்தரர் வாதவூரர்வா
கீசர் துதிசெய மகிழ்ந்தோய்
கெங்காத ராகௌரி பங்காள காசிவரு
கேதார நாத குருவே. 5

(பொ – ரை) கிம்புருடர்களும், திருஞானசம்பந்தர். சுந்தர மூர்த்தி. சுவாமிகள், திருவாதவூரர், திருநாவுக்கரசர் ஆகியோரும்

துதிசெய்ய மகிழ்ந்தவனே! செம்பினைப் பொன்னாகச் செய்யும் குளிகை போன்ற உன் திருவடிகளை என் தலைமீது வைத்து அறிவு போலே விளங்கும் அறியாமையை முற்றுமாகத் துடைத் தருள். விளக்கமான ஒளியையே அடையாக அணிந்தவனே! பரமானந்தமென்ற ஒன்றுடன் இரண்டற ஆகும்படி அருள்க. எண்ணிலடங்கா அண்டகோடிகளை பரம அணுவாக ஆக்கி விடும் அற்புதப் பேருரு உடையோய்! மங்களம் நன்மை இவற்றைச்செய்யும் இனிய சதாசிவலிங்கனே! எல்லாவகைத் தளைகளையும் கடந்த ஒன்றுமில்லாதஉளத்தவருக்கு எப்போதும் இன்பம் தரும் அறிவானந்த வடிவனே!

(க - து) அறிவாகக் காட்சி தரும் என் அறியாமையை அகற்றிடுக.

(கு - ரை) குளிகை - உருண்டை. சித்துருவமுற்றமலம் - 'அறிவுபோல் அடர்த்தெழும் அறியாமை' (சிவஞான முனிவர் உரை) அகளங்கன் - மறுவற்றவன். கிம்புருடர் என்றதன்பின் சமயாச்சாரியர்களை எண்ணுகை - இவர்களும் ஒருகால் தேவ நிலையில் இருந்து உலகம் உய்ய அவதரித்தோர் என்பதைக் காட்டுவதற்காகப் போலும், சம்பந்தரை 'மதுர வாணியுற்ற கழலோனே,' 'வழுதிகூன் நிமிர்ந்த பெருமானே' என அருண கிரியார் குறித்து அவரை உபசாரமாக முருகனின் அவதார மென்பார். சுந்தரர் இறைவனின் தோழராகக் கயிலையில் இருந் தவர். வாதவூரர் - 'குடமுழ நந்தீசனை வாசகனுக் கொண்டாய்' என்பதால் நந்தி கணத்துள் ஒருவரின் அவதாரம் ஆவார். நாவுக்கரசர் - கூற்று ஆயினவாறு விலக்ககலீர்' என தான் முன்பு இராவணனது மீளுகைக்கு உபாயம் சொன்ன வகையை நினைவு கூர்ந்ததாக கூறி அவரை வாகீச முனிவராகக் கூறல் உண்டு. சம்பந்தர் முதலசை குறைந்து வந்தது.

வேதன்மா லறியாம லாதியந் தமுமின்றி
வெளிநின்ற வொரு சோதியே
விண்ணாதி மண்ணந்த மெல்லாம் விழுங்கியருள்
விரிகிரண மெய்ப்பானுவே
தீதுறும் பிறவிவெப் பொழியவரும் அற்புதச்
செழுந்தவள சீதமதியே
திருவரு ளெனும்பெரிய கடல்மடை திறந்துவிழி
செகதண்ட கோடிதரிசர்

நாதபரி புரமசைய வானந்த நிர்த்தமிடு
ஞானசபை நடராசனே
நானென தொழிந்துடல வாதனை யழித்துருவ
ஞானமென நிற்க அருள்வாய்
கேதகை வெறுத்திதழி தாதகி யெருக்குமணி
கிளரொளிப் பூண்மார்பனே
கெங்காத ராகௌரி பங்காள காசிவரு
கேதார நாதகுருவே. 6

(பொ – ரை) தாழையை வெறுத்து கொன்றை, ஆத்திமலர், எருக்கு இவைகளை அணியும் ஒளிநிறை மார்பனே! கேதார நாதனே! பிரமன் திருமால் அறியாதபடிக்கு ஆதியந்த மில்லாது நின்ற ஒப்பற்ற ஒளியே! விண்முதல் மண்ணீறு அனைத்தையும் அடக்கிய ஒளிவிரியும் கதிரவனே! தீதான பிறவிவெப்பம் ஒழிய வரும் அற்புதச் சீதமதியே! சகத்திலுள்ள எண்ணற்றோர் தரிசிக்கும் படி பெரியகடல் மடை திறந்தது போல் திருவருள் பெருகிவர திறந்திடுக விழி! நாதமாம் சிலம்பசைய ஆனந்த நடனமிடு ஞானசபையின் நடராசனே! நான் எனது என்ற அகப்புறப் பற்றுக்களையும், உடலின் வாதனைகளையும் அழித்து ஞானவடிவமாக நிற்க அருள்வாய்.

(க – து) நான் எனது என்னும் பற்றற்று மெய்ஞ்ஞானம் பெற வழிகாட்டுக.

(கு – ரை) திறந்து விழி – விழிதிறந்திடுக என மாற்றுக. முன்னிலை ஏவல் வியங்கோள் வினைமுற்றாகக் கொள்க. உருவ ஞானம் என்பதை ஞானஉரு என மாற்றுக. கேதகை - தாழை. தாழையைவிரும்பாமல்எளியதும்பை கொன்றையை விரும்புதல் அவனதுஎளிய கருணையைக்காட்டும். பொய்சொல்லஇணங்கிய மணம் நிறை தாழையை ஒதுக்கியது அவனது வைராக்கியத் தைக்காட்டுவதோடுபொய்யருளத்தணுகாமையையும் காட்டும். பிரமன் முடிதேடியபோதுதாழை பொய்சொல்ல இணங்கியதாம்.

என்ன மாதவமுன் பியற்றினேன் எளியனேன்
இமையவர்கள் பணியவரிதாம்
ஏர்கொண்ட அவிமுத்த நகரத்தி லேயென்றும்
இடையறாதே வாழவும்
மன்னு கங்காநதி யின்மூழ்கவும் ஒருபெரிய
மணிகன்னிகைத் தடத்தில்

வந்துபடி யவும்வேத மோதுசிற் சிவஞான
வாவியுதகம் பருகவும்
உன்னழகு பொழிகின்ற திருமேனி காணவும்
உயிரினுக் குயிராகியே
உல்லாச பரமசுக சானந்த வடிவான
உபய சரணம் பணியவும்
கின்னர ரெனும் புலவர் முதலோர்கள் பாடுமிசை
கேட்டருளும் இருசெவியனே
கெங்காத ராகௌளரி பங்காள காசிவரு
கேதார நாதகுருவே. 7

(பொ – ரை) கின்னரர் எனும் புலவோர் பாடும் இசை கேட்டருளும் இருசெவியுடையோனே! கேதார நாதனே! அழகான அவிமுத்தமாம் காசியில் இடையறுது வாழவும், நிலைத்த கங்கையில் மூழ்கவும், ஒப்பற்ற மணிகன்னிகைத் தடத்தில் படியவும், வேதம்புகழும் சிவஞானவாவியின் தீர்த்தம் பருகவும், அழகு பொழிகின்ற உன்திருமேனிகாணவும், உயிர்க் குயிரான மேலான ஆனந்த வடிவுகொண்ட இமையவர்களும் பணியவரிதான இரண்டான திருவடிகளைப் பணியவும் என்ன மாதவம் முன்பு எளியனேன் செய்தேன்!

(க – து) காசியில் வாழ்வதும் விசுவேசனைப் பணிவதும் முன்னைய நல்வினைப் பயனுலேதான் கிட்டியது.

(கு – ரை) இமையவர்கள் பணியவரிதாம் உபயசரண மெனக் கூட்டி முடிவு செய்க. மன்னு கங்கை – 'தீர்த்த னிதழிச் சடைநின்று மிழிந்து வரலாற் சிவகங்கை' (திருவிளை – அன்னக் குழி 27) என்று பெயர்வந்தவாறு காண்க. ஞானவாவி– ஜடிலன் என்ற யோகி காசிவந்த போது; கோயிலுக்குப் பக்கத்தில் தீர்த்தம இல்லாதிருப்பது கண்டு தனது திரிசூலத்தால் கிண றென்று தொட்டார். அவரது பூசையை ஏற்றருளிய பெருமான் மகிழ்ந்து இது 'ஞான வாவி' எனப் பெயர் பெறுக. இதன் கண் மூழ்கினேர்க்கு ஞான வைராக்கிய சித்தி விளைக – என்ற ருளிச் செய்தார். பாடலில் 'சித்' என்ற அடைமொழி இதனைக் காட்டுகிறது.

(தொடரும்)

# தினசரி வாழ்க்கை

டாக்டர். திரு. மு. அறம்

துணைவேந்தர், கிராமியப் பல்கலைக்கழகம், காந்திகிராமம்.

1964 ஆம் ஆண்டில் நான் வினோபா அடிகளை நாக்பூர் நகரத்தில் சந்தித்தேன். இரண்டு நாட்கள் அவருடன் தங்கியிருந்தேன்.

அப்பொழுது கோவை ராமகிஷ்ண வித்யாலயத்திலிருந்து விடுமுறையில் வெளியேவந்திருந்தேன். சீன–இந்திய சமாதான யாத்திரையில் கலந்துகொண்டு, பின் என்னசெய்வது என்று நினைத்துக்கொண்டிருந்த காலம். நன்கு ஆலோசித்து சர்வோதய இயக்கத்தின் முழுமையாகச் சேர்ந்துவிடுவது என்ற முடிவுக்கு வந்தேன்.

அன்று வினோபா அடிகள் என்னிடம் கூறினார்; “இன்றிலிருந்து நீங்கள் என் குடும்பத்தின் உறுப்பினர் என்று. இவை நான் என்றும் மறக்க முடியாத வார்த்தைகள்.

நாக்பூரிலிருந்து மத்திய பிரதேசத்தில் உள்ள முக்கிய நகரமாகிய இந்தூர் சென்றேன். அங்கு வினோபா நிறுவியுள்ள ‘விசர்ஜின்’ ஆசிரமத்தில் இரண்டு மாதங்கள் தங்கியிருந்தேன். வினோபா என்னை அங்கு அனுப்பியதன் நோக்கம் இந்தி பயில்வதற்காக.

இந்திப் பயிற்சியுடன் வினோபாவுடைய சிந்தனைகளையும் தெரிந்துகொள்ள நல்ல வாய்ப்பாக இருந்தது.

வினோபா கீதையின் வழியில் வந்தவர். “கீதை என்னும் [illegible] ” என்று அவர் சொல்லியுள்ளார்.

கீதைக்கு ஏற்ப தினசரி வாழ்க்கையை எவ்வாறு அமைப்பது?

ஒவ்வொரு நாளும் முக்கியமானது. ஒவ்வொரு நாளாகச் சேர்ந்து தான் ஒருவருடைய வாழ்க்கை உருவாகிறது

குறிப்பு :– திருச்சி வானொலியில் ஒலிபரப்பினது. அனுமதியுடன் வெளியிடப்படுகிறது.

ஒவ்வொரு நாளையும் நன்கு பயன்படுத்தினால் வாழ்க்கை நன்கு உருவாகும். நாள் வீண் போய்விட்டால் வாழ்க்கையும் வீண் போய்விடும்.

" நாள் என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாள் அது உணர்வார்ப் பெறின் "

என்பது திருக்குறள்.

தினசரி வாழ்க்கையை எவ்வாறு அமைப்பது என்பதைப் பற்றி விநோபா கூறியுள்ள கருத்துக்களை நான் ஒரு சிறு சூத்திரம் போல் எழுதினேன். அது பின்வருமாறு :

" காலையில் சங்கல்பம், பகலெல்லாம் சாதனை
மாலையில் சமர்ப்பணம், இரவில் சமாதி ".

## காலையில் சங்கல்பம் :

அதாவது அதிகாலையில் நாள் முழுவதும் என்னென்ன செய்வதென்று உறுதி செய்வது. என்னென்ன கடமைகள் செய்யவேண்டும், என்னென்ன நன்மைகள் செய்யவேண்டும், என்னென்ன அறங்கள் இயற்றவேண்டும் என்றெல்லாம் சிந்தனை செய்து முடிவு செய்யவேண்டும்.

இவ்வாறு சங்கல்பம் செய்வது நம் தமிழ் மரபிற்கு ஒத்ததே. ஒரு தமிழ்ப் பாடல் கூறுகிறது :

" வைகறை யாமம் துயில் எழுந்து தான்செய்யும்
நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து — வாய்வதில்
தந்தையும் தாயும் தொழுதெழுக என்பதே
முந்தையோர் கண்ட முறை ".

அதிகாலையில் நாம் செய்யும் நல்லறமும் ஒண்பொருளும் பற்றிச் சிந்திக்கவேண்டும். அதாவது நாள் திட்டமிடவேண்டும். பின்னால் திட்டமிட்டபடி செயல்படவேண்டும். "செயல்களைத் திட்டமிடு, திட்டத்தைச் செயலாக்கு. "

## பகல் எல்லாம் சாதனை :

அதாவது திட்டமிட்டபடிப் பல்வேறுசெயல்களில் ஈடுபடுதல். அலுவலகத்திலோ அல்லது தொழிற்சாலையிலோ அல்லது வயல்வெளியிலோ அல்லது வேறு வேலைக் களத்திலோ, தேவைக்கேற்ப, சூழ்நிலைக்கேற்ப செயல்படவேண்டும்.

செயல்படும்பொழுதுகோபதாபமில்லாதுஇருக்கவேண்டும். சினம், அச்சம் வராதிருக்கவேண்டும். வெறுப்பு, வன்முறை நிகழக்கூடாது. அன்பால், ஆர்வத்தால். கடமை உணர்வால் தூண்டப்பட்டு பல்வேறு ஆக்கப்பணிகளில் அயராதுஉழைக்க வேண்டும். உலேவின்றி உழைக்க வேண்டும். இவ்வாறு செயல் பட்டு நாள் இறுதியில் சோர்ந்து போய்விட வேண்டும்.

பாரதியார் கூறுவது: " நடுவான கருமங்கள் செய்ததும் ". அதாவது செய்யும் கருமம் எழுச்சி, வீழ்ச்சி என்னும் இருமுனை களில் சிக்காது, நடுநிலையில் பணி செய்யவேண்டும். இதையே " கர்ம யோகம் " என்று சொல்கிறோம்,

சாதனை என்பது கட்டுப்பாடான முயற்சியாகும். மனம் தூய்மைபெற, ஆன்மா ஓங்கி வளர, நாம் செய்யும் முயற்சி சாதனை ஆகும். இத்தகைய சாதனையில் பகல் முழுதும் நாம் ஆழ்ந்துவிடவேண்டும். நாளின் இறுதியில் மாலை வருகிறது.

### மாலையில் சமர்ப்பணம் :

பகலெல்லாம் செய்த சாதனையின் பயனை, செய்ததை, செய்யாததை;முடித்ததை,முடிக்காததை; நலத்தை,பொலத்தை; இறைவன் திருமுன் மாலையில் சமர்ப்பித்துவிட வேண்டும். வரவு, செலவுக்கணக்கை முடித்துத்தெய்வத்தின் முன்படையல் வைத்துவிட வேண்டும்.

இவ்வாறு செய்துவிட்டால் உள்ளத்தில் விடுதலை உண்டா கும். மனத்தில் அமைதி ஏற்படும்.

### இரவில் சமாதி :

சமாதி என்றால் சமநிலை, அமைதிநிலை. இந்நிலை அடைந்து விட்டால் இரவில் ஆழ்ந்ததூக்கம்வரும். தூக்கத்தில்கலக்கமோ கனவோவராது.

இவ்வாறு வாழ வேண்டுமென்று [illegible] வழி காட்டு கிறார். இது வாழ்க்கைக் கலைக்கு அவர் தரும் விளக்கம். செய்து பாருங்கள்:

" காலையில் சங்கல்பம், பகலெல்லாம் சாதனை
மாலையில் சமர்ப்பணம், இரவில் சமாதி ".

---

# கேதாரம் நோக்கி....!

திரு. வி. ஆறுமுகம் ஐ. ஏ. எஸ். (ஓய்வு)

( மலர் 43, இதழ் 4, பக்கம் 182 இன் தொடர்ச்சி )

## 6. யமுனோத்ரி அடைந்தோம்

அன்று வியாழக்கிழமை. கயிலைமாமுனிவருக்கு மௌன தினம். நாள் செப்டம்பர் 22.

காலையில் கங்கோத்ரியை விட்டுப்புறப்பட்டோம். ஜீப் மூலமாக 10 கி. மீ. தொலைவில் உள்ள பைரோன் காட்டிற்கு வந்தோம்.

எங்கள் பயணக்குழுவில் பானுமதி என்ற ஆசிரியையும் வந்திருந்தார். அந்த அம்மையார் தம் கைப்பையை தவற விட்டார். பைரோன் காட்டுக்கு வந்தபிறகுதான் எங்களுக்குச் செய்தி தெரிந்தது! அதில் ரு 470/= இருந்ததாம்! பயணங்களில் இப்படி சில நேர்வது உண்டு! எப்போதும் எச்சரிக்கையோடு இருக்க வேண்டியது நம் கடமை; அதற்குமேல் விதிப்படித் தானே நடக்கும்.

பைரோன் காட்டிலிருந்து சிலர்தண்டியிலும் சிலர் நடந்தும் வந்தோம். செல்லும் போது ராணுவத்தில் பணிபுரியும் அறிமுக மான நண்பர்களைச் சந்தித்தோம்; விடைபெற்றோம். காலை 10 மணிக்கு பஸ்ஸில் புறப்பட்டு முதலில் வந்த வழியிலேயே ஹார்சிங், ஜவ்லா, பட்வாரி ஆகிய ஊர்களைக் கடந்து 80 கி. மீ. தூரத்திலுள்ள உத்ரகாசியை பிற்பகல் சுமார் 3 மணியளவில் அடைந்தோம். ஒருமணி நேரம் அங்கே தங்கி மேலும் பயணத்தைத் தொடர்ந்தோம். அங்கிருந்து தார்சு வழியாக 55 கி. மீ. பயணம்செய்து பர்கோட் என்னும் இடத்தை அடைந்த போது மாலை மணி 7. அன்றிரவு பயணிகள் விடுதி ஒன்றில் தங்கினோம்; ஓய்வு கொண்டோம்.

மறுநாள்காலை ஹனுமன்செட்டி என்ற ஊரை அடையும் போது காலை மணி 10, இந்தப்பாதை வழியாகத்தான் யமுனோத்ரிக்குச் செல்லவேண்டும். இப்பகுதி கடல்மட்டத்திலிருந்து 8000 அடி உயரத்தில் உள்ளது.

இந்த ஊரிலிருந்து ஒருபாதை யமுனோத்ரியை நோக்கிச் செல்கிறது. யமுனையின் ஓரம்! பள்ளத்தாக்கு அது. அந்தப் பள்ளத்தாக்கு நெல், கேழ்வரகு. கோதுமைப் பயிர்களோடு – வண்ணக்கோலம் கண்டதுபோல் எல்லாருடைய எண்ணத்தி லும் இனிக்கும் எழிற்காட்சி நல்கிற்று!

அனுமான்சட்டியை அடுத்து ஜானகிபாய்சட்டி என்ற ஊர். அங்கிருந்து யமுனோத்ரி 6 கி. மீ. ஆக அனுமன் சட்டியிலிருந்து யமுனோத்ரி வரை 13 கி. மீ. தொலைவை நடந்துதான் கடக்க வேண்டும்.

நடந்துசெல்ல முடியாதவர்கள் குதிரை அல்லது தண்டியில் போக வசதி உண்டு.

பாதை பயங்கரமானது! ஒரு பக்கம் மலை. மறு பக்கம் பல நூறு அடி பள்ளத்தின் கீழே யமுனை நதி. பாதை கரடுமுரடானது; ஒற்றையடிப்பாதை. மழையோ, பனியோ பெய்தால் வழுக்கி விட்டுவிடும்.

எங்களில் 19 அன்பர்கள் குதிரையிலும், அறுவர் தண்டி யிலும் சென்றோம். மொத்தம் 13 கி. மீ. பயணத்தில் 2 கி. மீ. பயணம் நடைப்பயணம் தான்; வேறு வழியில்லை! குதிரையில் சென்றாலும் சரி; தண்டியில் சென்றாலும் சரி – மேலே உள்ள பாறை தலையைப் பதம் பார்த்து விடும்.

நான் சென்ற குதிரையின் பெயர் வசந்தி. அந்தக் குதிரை யைப் பிடித்துக் கொண்டு வந்தவர் ஜட்டிசிங் என்பவர்; இவர் மிக இதமானவர்; அன்போடு அழைத்துச் சென்றார்.

அனுமன் சட்டியிலிருந்து நாங்கள் புறப்பட்டபோது மழைத்தூரல் இருந்தது. சற்றுநேரத்தில் காலநிலை சரியாகி விட்டது. எங்களுடன் வந்த சண்பகம் என்ற சற்று வயதான அம்மையார் ஏறிவந்த குதிரை மட்டும் மிகவும் வேகமாகச் சென்றது; எங்களுக்கு ஒரே ஆச்சரியம்! – எப்படி இந்த அம்மையார் பயமில்லாமல் போகிறார்கள் என்று.

ஜானகிபாய் சட்டியில் எல்லோரும் தேநீர்பருக இறங்கி னோம்! அப்போதுதான் தெரிந்தது அந்த அம்மையார் மிகவும் களைத்துப்போய் இருந்தார்கள். தன்னைக் கீழே தள்ளிவிடும் என்று அஞ்சி பயந்துபோய் இருந்தார்கள். மாற்று ஏற்பாடு செய்துகொண்ட பின்பே பயணத்தைத் தொடர்ந்தார்கள்.

யமுனோத்ரி பனிமலைக் குன்றுகள் நிறைந்த இனிய பகுதி-கங்கோத்ரியைவிட ஏறத்தாழ 700 அடி உயரம் அதிகமான இடத்தில் உள்ளது. யமுனோத்ரி ரிஷிகேசத்திலிருந்து 222 கி. மீ-தூரத்தில் உள்ளது.

அனுமன் சட்டியிலிருந்து யமுனோத்ரி வருவதற்கு குதிரையில் செல்ல ரூ. 120—00. ம், தண்டியில் செல்ல ரூ. 500—00. ம் வாங்குகிறார்கள் பயணம் கடுமையானது பொறுப்பும் மிகுதியாகிறது அல்லவா !

## யமுனோத்ரி

சலசல என ஓடும் ஆறு! அது யமுனை. அதன் அருகே ஓர் அம்பாள் கோயில்! அது யமுனமாதாவின் கோவில். இங்குள்ள மலைப் பகுதியிலிருந்து ஆவிபறக்கும் வெந்நீர் ஊற்றுக்கள் கொப்பளித்துக் கிளம்பி வருகின்றன. அவற்றில் ஒன்று சூரியகுண்டம்.

இந்த ஊற்று வெளிப்படுத்தும் வெந்நீர் தண்ணீருடன் கலந்து இரண்டு தொட்டிகளில் நிறைகிறது. அதில் ஒருதொட்டி ஜமுனபாய் குண்டு என்பது. இதிலும் நீராடலாம். மற்றொரு தொட்டியுமுண்டு. அதிலும்நீராடி மகிழலாம். வெந்நீர் இதமாக பதமாக இருக்கிறது.

இங்கே ஒரு ஆச்சரியத்தை நாங்கள் கண்டோம். குளித்து முடிவதற்குள்ளே உணவு தயார் ! எப்படி ?

ஒரு துண்டில் அரிசியைப் போட்டுக் கட்டுகிறார்கள் ; இன்னொரு துண்டில் உருளைக்கிழங்கை வைத்துக்கட்டுகிறார்கள். இந்த இரண்டு துணிமுடிச்சுக்களையும் சூரிய குண்டத்தின் மேல் வரும் ஆவிபடும் படியாகக் கட்டிவிடுகிறார்கள் ! ஆவியில் அரிசிச்சோறும் உருளைமசியலும் தயார் !

இதமான குளியல் ! பதமான உணவு குளித்து முடிந்த உடன் தயாரான உணவை அங்குள்ள திவ்யஷிலா என்ற அம்பாளுக்கு நிவேதனம் செய்கிறார்கள்! பிறகு உண்கிறார்கள். ஆக நீராடல், வழிபாடு, உணவு முதலிய வசதிகளையும் எங்கோ உள்ள மலைப்பகுதியில் இருக்கும் மனிதனுக்கு இறைவன் அளித்து விடுகிறான் ! என்னே இறைவனின் அருளிப்பாடு! அந்த அனுபவமே அலாதி!

யமுனோத்ரி நிர்வாகம் மறுகரையிலுள்ள கார்சாலே கிராமத்துப் பண்டாக்களுடையது. அவர்களே கோயில் அருச்சகர்கள்; அவர்களே வைதிகச் சடங்கு செய்பவர்கள்.

எங்களில் ஒன்பதுபேர் மட்டும் தாமதமாக வந்தார்கள். நாங்கள் பதினெல்வர் தரிசனம் முடிந்து திரும்பினோம். அந்தக் காட்சி என் உள்ளத்தில் பசுமையாக நிறைந்து நிற்கிறது.

நீண்டமுழுக்கை - காவிச்சட்டை; காவி இடையாடை; காவித்தலைப்பாகை - இந்த எழிற் கோலத்துடன் கயிலைமா முனிவர் குதிரையில் முன்னே செல்கின்றார்கள்! அவர்களுக்குப் பின்னல் ஆடவரும் பெண்டிருமாகப் பதின்மூவர் குதிரையில் சென்றோம்!

இது என்ன வீரசிவாஜியின் நாடுவளக்கும் படையா ?

இல்லே ! இல்லே ! இது சைவம் பெருக்கும் சிலப்படை; அமைதிப்படை ! அற்புதமான காட்சியை எண்ணி எண்ணி மகிழ்கிறேன்.

நாங்கள் பதினெல்வரும் மாலே 6 மணியளவில் அனுமன் சட்டி திரும்பினோம். காலம்தாழ்த்து யமுனோத்ரி அடைந்தோரில் மூன்று பெண்கள் கூடத் திரும்பிவிட்டார்கள்; ஆனல் மற்ற 5 பெண்களும் நாயர் அவர்களும மட்டும் வரவில்லே. மணியும் 7-30 ஆகிவிட்டதே! என்ன ஆனார்களோ என்ற அச்சம்!

எங்களேக் கவலே மிகவும் வாட்டியது; சுவாமிகள் ஜபம் செய்யச் சொன்னார்கள்.

ஜபம் ! ஜபம் ! அவர்கள் எங்களுக்குக் கவலே வரும் போதெல்லாம் கற்பித்த நன்மருந்து அது ! ஜபம் செய்து கொண்டே இருந்தோம். யாரும் உணவும் கொள்ளவில்லே !

அவர்கள் என்ன ஆனார்களோ ! 'கடவுளே கதி' - மனம் ஏதேதோ கருதிக் கொண்டிருந்தது; எப்படியாலுலும்யார்என்ன செய்ய முடியும்!

(தொடரும்)



# மூர்த்தியார்

வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன் எம். ஏ.,

[ தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் 4—3—84 ஆங்கிலமாத முதல் ஞாயிறன்று வழங்கிய அருளுபதேசத்தை ஒட்டி எழுதப்பெற்ற கட்டுரை. ]

தருமைக்கு ஈடு தருமைதான் ! இயற்கையின் இன்ப அழகு புறக்கண்களுக்கு விருந்து ! அகக்கண்ணுக்கு ஆதீனத் திருமடத்தின் அருள் நெறிகள் ! அப்பப்பா... இதன் இனிமையே தனிமை !

திருவீதி அழகும் திருக்கோயில் அழகும் எண்ணி மகிழ்ந்தவாறே திருமடத்துத் திருவாயிலில் நுழைகின்றேன். இருபுறமும் பளபளக்கும் கருங்கற்சிற்பங்கள் அவை ! வீரர்களின் சிற்பங்கள் ! வாளேந்திக் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்தவாறே நிற்கிறார்கள்; எச்சரித்து அனுப்புகிறார்கள் நம்மை உள்ளே. தெய்வம் இருக்கிறது; பணிவாக இருந்து தரிசித்துத் திருநீறு பெறுக; உபதேசம் பெற்று வருக " என்று !

காலை மணி பத்து. உபதேசம் தொடங்குகிறது. குரு வணக்கம் பாடிய குருமணிகள் 'உலகெலாம் என இறைவனே அடியெடுத்துக் கொடுத்த பெரியபுராணக் கடவுள் வாழ்த்தையும், பத்திச்சுவை நனி சொட்டப் பண்ணிசைக்கின்றார்கள் ! பரவசப்படுகிறோம் !

" மும்மையால் உலகாண்ட மூர்த்திநாயனார் " பற்றிய சிந்தனை. குருநாதர், தம் சிந்தனையில் அப்போது பளிச்சிட்ட ஒரு பொருத்தத்தையும் நம்மனம் மகிழும் பொருட்டு அருளினார்கள். மூர்த்தியார் மும்மையால் உலகாண்டவர்; அவரைப் பற்றித் திருத்தொண்டத் தொகையில் மூன்றும் பாடலில் முதலாவதாகக் காணப்படுவது பொருத்தமாகவே இருக்கிறது "

அன்று மூர்த்திநாயனார் வரலாற்றைச் சமயநெறித் தத்துவங்களோடு குருமணிகள் இயைத்து வழங்கினார்கள்; நாம் கதை

தான் கேட்கிறோம் என்றும் கருதமுடியாமல் - சமய விளக்கம் தான் பெறுகிறோம் என்ற உணர்வும் தோன்றுவகையில் கதையும் தத்துவமுமாக அவர்கள் நமக்குப் புரியவைக்கிறபாங்கே அலாத !

நாடாளும் அரசனுக்கு முதலில் அபிஷேகம் செய்ய வேண்டும்; ஆபரணங்களை அணிவிக்கவேண்டும்; திருமுடி - அதாவது கிரீடம் சூட்டவேண்டும். மூர்த்தியார் அரசராக ஆகுமுன் இந்த மூன்றையும் சிவநெறி சேர்த்திச் செய்வதானால் அரசனாக ஒப்புக்கொள்கிறேன் என்றார்.

திருநீறே - அபிஷேகப், பொருள்; உருத்திராக்கம் - அணி கலன்கள்; சடைமுடியே - திருமுடி; - இந்த மும்மையால் உலகாண்டவர் மூர்ததியார் - இவ்வாறு குருமணிகள் எளிமையாக உணரும் வண்ணம் விளக்கம் அருளினார்கள்.

சடையின் பெருமையைத் தேவாரத் திருப்பதிகங்களை மேற்கோள் காட்டியும் உலகியல் வழக்குச் சொற்களை விளக்கியும் அருளியபோது அந்த ஞானத்தவநாதரின் பெருமையை எண்ணி வியக்காமல் இருக்க முடியாது !

பகீரதன் பெருந்தவம் புரிந்தான்; ஆகாய கங்கை மிகவேகமாக மேலிருந்து கீழிறங்கிற்று. செருக்கோடு பாய்ந்து வந்தது கங்கை ; பெருமான் தன் சடையில் அந்தக் கங்கையை ஏற்றார் ''

குருநாதர் ஏதோ கதைசொல்கிறார்கள் என்றுதான் எண்ணினேன்; பகீரதன் பட்டபாடு - செய்த தவம் - கொண்ட முயற்சி மிகவும் கடுமையானது அருமையானது - அதனால்தான் ' பகீரதப் பிரயர்த்தனம் ' என்று உலகவழக்கு அமைந்துள்ளது என்று விளக்கமளித்தபோது நாம் எல்லாச் செயல்களையும் நம்மை அறியாமலே முன்னோர் பெயரால் வழங்குகிறோம் என்ற உணர்வும் பெற்றேன்; சொல்லின் - வழக்கின் பெருமையையும் உணர்ந்தேன்.

கங்கையைச் சிவபெருமான் தமது திருமுடியிலே ஏற்றார்; கங்கையோ கடுத்துவந்தது! சடாபாரம் தாங்குமா? நம்மனத்தில் ஐயம்!

“ ஒரு சாதாரண அதிர்ச்சி ஏற்பட்டாலே குலுங்கிப் போகிறோமே! செருக்கோடு வேகமாகப் பாய்ந்ததே கங்கை - அதனை மணங்கமழும் சடையில் சிறிதும் ஆடாமல் - எந்த அதிர்ச்சி

வெளிப்பாடும் கொள்ளாமல் ஏற்றார் " – குருநாதர், மனிதத்தன்மையின் மாறுபட்ட தெய்வநிலையாகிய இதனை,

"கடுத்துவரும் கங்கைதன்னைக் கமழ்சடை ஒன்று
ஆடாமே தடுத்தவர் எம்பெருமானார் "

என்ற புள்ளிருக்குவேளூர் (வைத்தீசுவரன்கோவில்) தேவாரத் திருப்பதிகம் கொண்டு விளக்கியபோது மெய்ம்மயிர்சிலிர்த்தது; விதிர்ப்பு எய்தினோம்.

உரோமந்தானே சடை!-இதற்கு ஏன் இவ்வளவு பெருமை-மனிதமனம் இப்படிச் சிந்திப்பது இயற்கைதான்.

" குறைவானது – இழிவானது என்று நாம் கருதும் பொருள்கள் உயர்வானதாகவும் அமைகின்றன. சங்கு பூச்சியுடன் இருக்கும்போது இழிவானது என்பார்கள்; சடைக்கு உரிய உரோமத்தையும் அப்படிச் சொல்வார்கள். "

ஒரே ஒரு ரோமம் நீரில் விழுந்து விட்டால் தண்ணீரைப் பருகமாட்டோம்; வள்ளுவரும் 'தலையின் இழிந்த மயிர்' என இழிவுப் பொருளில் உவமை கூறுகிறார். ஆனால் சிவனது சடாபாரத்தினின்றும்வருகின்ற கங்கை, புண்ணியநதியாகிறது. மயிர்-அனுசிதம்-சடை-புனிதம். இக்கருத்தைத் தேவிபாகவதம் மொழிவதாகக் குருமணிகள் குறிப்பிட்டார்கள்.

சங்கு எப்படி உயர்ந்ததாகும்? குருநாதர் தமது அருளாட்சியில் சிறப்புற்றுவிளங்கும் திருக்கடவூர்ச் சங்காபிஷேகத்தையே அதற்குச் சான்றாகக் காட்டுகின்றார்கள்.

அபிஷேகப் பொருள்களிலெல்லாம் சிறந்தது அமிர்தம். "சிவனுக்கு அமிர்தத்தை அபிஷேகம் செய்யவேண்டும் ; திருக்கடவூர்ப் பெருமானே அமிர்தகடேசன் ! அந்தப் பெருமானுக்குக் கண்கண்ட அமிர்தமாகிய தண்ணீரில் 260 க்கு மேற்பட்ட பொருள்கள் கலந்து 1008 சங்குகளில் நிரப்பி அபிஷேகம்பண்ணுகிறோம் ; கார்த்திகைச் சோமவாரங்களில் இன்றும் சிறப்பாகச் சங்காபிஷேகம் நடைபெறுகிறது – "

குருநாதர் இக்கருத்தை நமக்கு உபதேசிக்கும்போது " கண்கண்ட அமிர்தம் தண்ணீர் " என்பதைத் திருக்குறளைச் சான்றுகாட்டி விளக்கினார்கள் – புதிய சிந்தனை;

இனிய விளக்கம் அது !

" வான்நின்று உலகம் வழங்கிவருதலான் தான் அமிழ்தம் என்றுணரற்பாற்று " என்பது இக்கருத்துக்கான மேற்கோள்

மேலும் ஒரு குறிப்பையும் அங்கே அருளினர்கள் – இறைவனுடைய அபிஷேகத்துக்கு நீர் எடுக்கும் கிணற்றை வேறு எந்தச் செயலுக்கும் பயன்படுத்தக் கூடாது; இறைவனுக்கே உரியது அது" என்று! அப்படி எங்கேனும் இருக்குமோ! என்று எண்ணிப்பார்க்கிறேம்! நமக்கு அத்தகைய ஒரு கிணறு இருப்பதாகப் புலப்படவில்லை.

"தருமபுரம் பூசைமடத்தில் சொக்கநாதர் அபிஷேகத்துக்காக உள்ள கிணற்றில் – பூசைக்கும் அபிஷேகத்துக்கும் அன்றி மற்ற எவற்றுக்கும் நீர் எடுப்பதில்லை" என்று குருநாதர் குறித்த போது – மனம் பெருமிதத்தால் விம்மியது.

இப்படிச் சடையின் பெருமைகளைப் பலவாறு விளக்கி அருளியவாறே நாயனுர் அவதரித்த மதுரையம் பதியின் சிறப்பை எடுத்துக்காட்டுக்கள் மூலம் விளக்கி வணிகர் குலத்தில் பிறந்து இறைவனுக்குச் சந்தனக்காப்பு அணிவிக்கும் தொண்டில் ஈடுபட்ட மூர்த்தியார் பெருமையைப் புலப்படுத்தினர்கள்.

**தொண்டு :**

மூர்த்தியார் நாள்தோறும் சந்தனக் கட்டைகளைப் பெற்றுத் தாமே அறைத்து மதுரைச் சொக்கநாதப் பெருமானுக்கு அணிவிக்கச் செய்தார். இதுவே அவர் குறிக்கோள்; இடைவிடாமல் ஆற்றவேண்டும் எனக்கருதி அவர் மேற்கொண்ட தொண்டு அது!

நாட்டில் குழப்பம்! கருநாடக மன்னன் நாட்டைப் பிடித்து ஆண்டான்! அவன் சமணமதத்தைத் தழுவியவன். நாயனுரின் தொண்டு பற்றிக் கேள்விப்பட்டான்; தொண்டினைத் தடுக்கத் தொல்லைகள் தந்தான்.

தொல்லை எல்லை கடந்தது! மூர்த்தியாருக்குச் சந்தனக் கட்டைகள் கிடைக்காதவாறு செய்தான் அந்த மன்னன். மூர்த்தியார் கொடுமைகள் செய்யும் மன்னன் மடமையைக் கண்டு மனந்தளர்ந்தார்! அடியாருக்கு மனத்தளர்ச்சி உண்டாக்கிய பாவம் மன்னனைச் சேர்ந்தது!

சந்தனக்கட்டை கிடைக்கப்பெருத மூர்த்தியார் தம் முழங்கைகளையே சந்தனக்கட்டையாகக்கருதினர்; கல்லில்வைத்தார்; தேய்த்தார்; தேய்த்தார்!–தேய்ந்தார்; தேய்ந்தார்! ஓய்ந்தாரில்லை–முழங்கைத்தசையும் என்பும் தேய்ந்து குருதி ஒழுகிற்று.

பெருமான் பார்த்துக் கொண்டே இருப்பாரா? "அன்பனே! உனக்குத் தீங்குசெய்த கொடுங்கோலன் அரசு முழுவதையும் நீயே ஏற்று பணிசெய்து அரசாள்க" என வானொலி எழுந்தது: நாயனர் ஊறுபாடுகள் நீங்கி ஒளியோடு திகழ்ந்தார்; சிவமணம் கமழ்ந்தது.

அன்றிரவு கருநாடக மன்னன் இயற்கையாக இறந்தான்! அவனுக்கு வாரிசு இல்லை! அமைச்சர் முதலாயினேர் ஒரு முடிவு செய்தனர். பட்டத்து யானையைப் பூசித்தனர்; கண்ணைக் கட்டினர்; வீதியில் ஏவினர்.

இறைவன் ஆணையின் வண்ணம் மூர்த்தியார் ஆலவாய்ப் பெருமான் திருக்கோயில் முன் நின்ருர். தெருக்களில் புழுதி கிளப்பிஓடிய யானை கோபுரவாயிலுக்கு வந்தது. மூர்த்தியாரிடம் வந்தது. வணங்கிக் கொண்டது; துதிக்கையால் தூக்கித் தன் முதுகின்மேல் வைத்தது;

இது கண்ட அமைச்சர் முதலியோர் அவரது திருவடிகளில் விழுந்து வணங்கினர். அரண்மனையடைந்தார். முடி சூட்டும் மண்டபத்தில் மூர்த்தியார் அமைச்சர் சூழச் சிறப்புடன் இருந்தார். அப்போது மூர்த்தியார் சமணநெறி நீக்கிச் சைவம் தழைக்கும் நெறியை அருளினர். திருநீறே அபிடேகப் பொருள். சிவனடியார் அடையாளமாகிய உருத்திராக்கமே திருவாபரணம் சடைமுடியே திருமுடி - இவ்வாறே இருக்கக்கடவேன் என்று கூறினர்.

இங்ஙனம் மும்மையால் உலகு ஆண்ட மூர்த்தியார் சிவநெறியே பரப்பி இறைவன் திருவடி சேர்ந்தார்.

இவ்வரலாற்றை அருளும்போது குருமணிகள் அருளிய கருத்துக்கள் பல.

சடைவிழுதல் இறைவன் திருவருளால் நிகழ்வது–ஒருசடை விழுவது என்பது அஸ்வமேதயாகம் செய்தபலனை ஆக்குவது–ஒருகுடும்பத்தில் ஒருசந்நியாசி உண்டாவது அக்குடும்பத்தின் 21 தலைமுறைக்கும் ஈடேற்றம் தருவது – நிலையானது சாம்பலே – அது எந்நாளும்மாருதுசாம்பலாகவேவிளங்கும்; நிலையாமையை விடு நிலைத்தபொருளைஎண்ணுதற்குச் சாம்பல்அடையாளம்; இக் கருத்துக்களை விளக்கியதோடு பொதியமலையும் கயிலையும் ஒத்தன என்பதை இறைவன் திருக்கல்யாணத்தின்போது அகத்தியரைப் பொதியமலைக்கு அனுப்பியவரலாறுகாட்டினர்கள். மேலும்

ஆண்டவன் பக்தனுக்குப் பெருமைதருகின்றநிலையை இதில் விளக்கி "கயிலையும் பொதியிலும் இடமௌ உடையார், கழுமலம் நினைய நம்வினை கறிசறும்" என்ற தேவாரப்பகுதியை எடுத்துக்காட்டி விளக்கியமை தேனுய் இனித்தது.

சீவக சிந்தாமணி கலித்துறை யாப்பினது; சிந்தாமணி கற்றிருந்த வேந்தனுக்காகப் பெரிய புராணம்பாடிய சேக்கிழார், மூர்த்தியார்புராணத்தைக் கலித்துறையாப்பில் அமைத்துள்ளார் இது சிவக்கவிமணியின் கருத்து. குருமணிகள் இக்கருத்தை எடுத்துக் கூறியருளிப் போற்றியபோது தக்காரைப் போற்றும் தருமையாதீனக் குருமணிகளின் சீரிய நெறியை மேலும் உணர்ந்து அன்பர்கள் மகிழ்ந்தனர்.

நாயனுர் வரலாற்றை ஒட்டி அடியேனும் சிந்தித்தேன் தருமையும் மதுரையும் ஒன்றே! மதுரையில் ஒருமூர்த்தி! தருமையில் குருமூர்த்தி! நம் மூர்த்திகளும் திருநீற்று ஒளிபெருக்கு கின்ருர்கள். அக்கமணியினை அணிந்த கோலத்தோடு விளங்கு கிருர்கள்! சடையை முடியாகக் கொண்டு சைவச் செங்கோல் ஓச்சுகின்ருர்கள் ஆலவாய்ச் சொக்கரை வழிபடுகின்ருர்கள் வேளுர்ச் செல்வமுத்துக்குமரனுக்குச் சந்தனுபிஷேகம் செய் கிருர்கள்.

அவர்கள் தாளிணை பணிவோம்! தண்ணருள் பெறுவோம்!

மனமகிழ்ச்சியோடு இல்லம் திரும்பினேன்.

வாழ்க குருமணிகள்!

---

**கடிதம் :**

தங்களின் 'ஞானசம்பந்தம்' சமயத் திங்கள் இதழ் படிக்கும் பேறுபெற்றேன். அவசியம் வாங்கிப் படித்துப் பயன்பெற வேண்டிய திங்கள் இதழ் எனச் சிறியேன் கருதுகிறேன். *

சு. மாணிக்கவாசகம் BS. C.,
தில்லைமினரல் எண்டர்பிரைசஸ்
திருமுருகன்பூண்டி P.O.
திருப்பூர் 638 652.




## ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

(ருத்ரோத்காரிஹு மாசிமீ 1உ முதல் 30உ முடிய)

(14—3—1984 முதல் 12—4—1984 முடிய)

| | | | |
|---|---|---|---|
| சூ பு | | ரா | |
| சு | இராசி | | சந் |
| ல | | | |
| கு | கே | சனி செ | |

| | | | |
|---|---|---|---|
| சனி | | ரா | செ சூ |
| | அம்ஸம் | | ல/ |
| | | | கு |
| | சு கே | சந் பு | |

ஸ்ரீ ருத்ரோத்காரிஹு மாசிமீ 30உ மங்கள வாரம் பூசநக்ஷத்திரம் பத்திரை கரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 54நாழிகை 14வினுடிக்கு மகரலக்கினத்தில் ஸ்ரீ உலகரட்சகரான சூரியபகவான் உலக சுபிட்சார்த்தத்தை முன்னிட்டுக்கும்பராசியிலிருந்து மீனராசி சங்கிரமணமாக பங்குனிமாதப் பிரவேசம் செய்தருள்கின்றூர். மறுதினம் புதவாரம் பங்குனி மாதம் முதல் தேதி ஷடசீதி புண்ணிய காலமாகும். சங்கிரமண கால கிரகஸ்திதியின் பலனுவது உலகத்தில் சுபிட்சம் ஏற்படும். தேச நலன்களுக்காகப் புனித ஸ்தலங்களில் எங்கும் வேதபாராயணங்கள் யாகவேள்விகள் சாஸ்திரோக்தமாக நடைபெறும். பக்திமான்களின் மனேலயனம் கோவில்களில் தெய்வங்களுக்கு சிறப்பு ஆராதனைகள் நடைபெறும். தேசங்களில் சுபிட்சம் நிலவும். ஈஸ்வரனருளில் நாடுகளில் எங்கும் இலட்சுமிகரம் பொருந்திய சமூக நலத்தொண்டர்கள் மக்கள் பிரதிநிதிகள்

ஏற்படுவார்கள். தேசங்களில் அறநிலையங்களில் எங்கும் ஆன்றோர்களால் சிவபுண்ணிய காரியங்கள் தர்மங்கள் நெறியுடன் நடந்துவரும். பிரஜைகள் அரசு நன்மைகள் பல அடைந்து தன் நிலைமையினின்றும் உயர்ந்து தொழில் புரிந்து உய்வார்கள்.

உலகெங்கும் உள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் பரம ஞானசாரியார்களாக வந்து திருவீற்றிருக்கின்ற சிவஞான குருமகான்கள் குருமகாசந்நிதானங்கள் உலகத்திற்கு அறவுரை இயம்பி அவ்வழியில் உலகம் இயங்க அருள்பிரசாதம் வழங்குவர். தேசங்களில் எங்கும் தேவாலயங்களில் நித்தியம் ஆறுகால பூசைகள் நடைபெறும். கோவில் நிர்வாகங்களில் ஈஸ்வர கட்டளையில் வந்துள்ள சிவநெறியாளர்களின் அரிய பணியில் உலகோப ஆலய உற்சவங்கள் சக்தி பூசைகள் சிறப்பாக நடைபெறும். பஞ்சமூர்த்திகளின் வீதியுலாக்காட்சி சிறப்புறும்; மக்கள் அனைவரும் பக்தி பரவசத்தில் ஈஸ்வர தரிசனம் செய்து களிப்பார்கள்; திரிகரணசுத்தியுடன் க்ஷேமமாக வாழ்வார்கள்.

1. மேஷம் :- அசுவதி – பரணி. கார்த்திகை – ¼
   (சு. சே. சோ. லா. – லி. லு. லே. லோ. – அ.)

மேஷராசி 9 பாதங்களும் மிச்சிர பலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல தனவருமானங்கள் வந்து கொண்டிருக்கும். அதற்கேற்ப நல்ல விஷயங்களில் செலவும் ஏற்படும். வித்தியா வியாபாராதிகளில் தொழில் நிறுவனங்களில் முதலீடு செய்யும். ஏப்ரல் 3உக்கு மேல் இலட்சியப்போக்கில் சுபகாரியங்களை ஏற்கநேரும். பிரபலஸ்திதியில் எல்லாக்காரியங்களையும் நடத்திக் கொண்டிருக்கும். வாகன சுகம் திருப்தியளிக்கும். தாராபுத்திரர்களின் நலம் நன்றாக இருந்துவரும். மார்ச்சு 17, 18, 19. 20, 21, 29, 30 ஏப்ரல் 3, 4 7, 8, 9 தேதிகளில் தனதாயம், வெற்றி, நல்ல சம்பவம் ஏற்படும். மார்ச்சு 22, 23 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

2. ரிஷபம் :- கார்த்திகை ¾– உரோகிணி – மிருகசீஷம் ½
   (இ உ. ஏ. – ஒ. வ. வி. வு. – வே. வோ.)

ரிஷபராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்ப அபிவிருத்தியில் தனவருமானங்கள் வெகுவாக வந்து கொண்டு இருக்கும். இரத்தின பூஷணம் தரும். மார்ச்சு 19உ க்குள் சிவந்த பொருள் பிராப்தி ஒன்றையளிக்கும். வீடுவாகனங்

களில் ஏப்ரல் 5உ. ஆனால் நல்ல ஏற்பாடுகளைச் செய்தல் ஆகும். புத்திரி அல்லது பௌத்திரிக்கு பிற்கால நன்மைக்கான முதலீடு செய்தல் ஆகும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். மார்ச்சு 14, 19, 20, 21 22, 23, 29, 30, 31 ஏப்ரல் 1, 2, 5, 6, 9, 10, 11 தேதி களில் தனலாபம், எத்தன காரிய ஜெயம், மனநிம்மதி ஆகிய நற்பலன் ஏற்படும். மார்ச்சு 24, 25 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ - திருவாதிரை - புனர்பூசம் ¾

( கா. கி. - கு. க. ஙு. ச்சா. - கே. கோ. ஹ. )

மிதுனராசி 9 பாதங்களும் சுபபலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல தனவருமானங்கள் வந்து கொண்டிருக்கும். இரத்தின பூஷணம் தரும். பூமி பிராப்தியில் நல்லன ஏற்படும். ஜீவனோபாயங்களில் பல நன்மைகளை ஏற்படுத்தும். அரச கண்யமாக எல்லாக் காரியங்களையும் நடத்தும். வாகன பிராப்தியில் நல்லன ஏற்படச் செய்யும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். மார்ச்சு 15, 16, 22, 23, 24, 25, 31 ஏப்ரல் 1, 2, 3, 4, 7, 8, 9, 12 தேதிகளில் விசேஷ நன்மைகளை ஏற்படுத்தும். மார்ச்சு 26, 27, 28 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

4. கடகம் :- புனர்பூசம் ¼ - பூசம் - ஆயில்யம்.

( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )

கடகராசி 9 பாதங்களும் மிச்சிர பலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானம் கண்யத்திற்கேற்ப வந்துக் கொண்டிருக்கும். கிரியா மேன்மையும் ஜெயமும் ஏற்படும். ஏப்ரல் 3உ ஆனால் துவங்கிய காரியங்களில் பூரணஸ்திதியை உருவாகும் எழுத்துமூல விஷயங்களில் நல்லன ஏற்படும். வாகன சுகம் திருப்தியளிக்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்து வரும். மார்ச்சு 14, 17, 18, 19, 24, 25, 26, 27, 28 ஏப்ரல் 3, 4, 5, 6, 9, 10, 11 தேதிகளில் தனலாபம் ஜெயம் ஏற்படும். புதிய காரியங்களை மேற்கொள்ளுதல் ஆகும். மார்ச்சு 29, 30 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

5. சிம்மம் :- மகம் - பூரம் - உத்திரம் ¼

( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே. )

சிம்மராசி 9 பாதங்களும் மிச்சிர பலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல தனவருமானம் வந்துக்கொண்டிருக்கும்.

பூமியில் இயந்திரசாதனங்களில் அபிவிருத்தி ஏற்படும். வித்வத்துவம்கலைத்துறைகளில் உத்தியோகத்தில் நன்மைகளை ஏற்படுத்தும். தாரபுத்திரகளின் சௌக்கியம் நன்ருக இந்துவரும். மார்ச்சு 15, 16, 17, 20, 21, 26, 27, 28, 29, 30 ஏப்ரல் 1, 2 தேதிகள் தனுதாயம், ஜெயம் விசேஷ அதிகார வேலைவாய்ப்புகள் ஏற்படும். மார்ச்சு 31 ஏப்ரல் 1. 2 தேதிகள் சந்திராஷ்டமம், மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

6. கன்னி :- உத்திரம் ¾ - ஹஸ்தம் - சித்திரை

(டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ.)

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் நல்ல தனவருமானம் வந்துக்கொண்டிருக்கும். இல்லத்தில்சாஸ்திரோக்த காரியங்களைச்செய்விக்கும் மார்ச்சு 28 டி ஆனல் வித்தியா வியாபாராதிகளில் கலைதுறையில் நல்ல ஸ்திதி ஏற்படும். வீடு வாகனங்களில் நல்ல சௌகரியம் இருந்து வரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்து வரும். மார்ச்சு 14, 17, 18, 19, 22, 23, 29, 30, 31 ஏப்ரல் 1, 2, 7, 8, 9, 10, 11 தேதிகளில் தனுதாயம் காரியானுகலம் ஏற்படும். பெரியோர் குருமார்களிடம் நல்லாசி பெறுதல் ஆகும். ஏப்ரல் 3, 4 தேதிகள் சந்திராஷ்டமம் மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

7. துலாம்:- சித்திரை ½ - சுவாதி- விசாகம் ¾

(ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தி. து. தே.)

துலா ராசி 9 பாதங்களும் சுபமான பலனைத் தரும். நல்ல தனவருமானம் வரும். நல்ல பூஷணம் தரும். வீடுபிராப்தி கால்நடை வாகன பிராப்தியில் நல்ல சௌகரியங்களை ஏற்படுத்திக் கொண்டிருக்கும். பூர்வ சொத்து அனுபோக பிராப்தியில் நல்லன ஏற்படும். வழக்குகளில் ஜெயம் தரும். எல்லாக்காரியங்களும் இஷ்டசித்தியாக நடந்து வரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்து வரும். மார்ச்சு 14, 15, 16, 20, 21 24, 25, 31 ஏப்ரல் 1, 2, 3, 4, 9 10, 11, 12 தேதிகளில் தனுதாயம் ஜெயம், இஷ்டசித்தி ஏற்படும். ஏப்ரல் 5, 6 தேதிகள் சந்திராஷ்டமம் மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

8. விருச்சிகம் :- விசாகம் ¼ - அனுஷம் - கேட்டை.

(தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு.)

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் நல்ல தன வருமானம் வரும். வித்துவத்-

துவம் கலைத்துறைகளில் உத்தியோகத்தில் மார்ச்சு 28 தேதி அளவில் அரசாங்க விகிதானுகூலங்களைத் தரும். விடுவாகனங்களில் நவீனம் பொருந்தும். இயந்திர சாதனம் சீர்படும். தார புத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்து வரும். மார்ச்சு 15 16, 17, 18, 19, 22, 23, 26, 27, 28 ஏப்ரல் 3, 4, 5, 6, 12 தேதிகளில் விசேஷ நன்மைகளை ஏற்படுத்தும். ஏப்ரல் 7, 8 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

9. தனுசு :- மூலம் - பூராடம் - உத்திராடம் ¼
( யே, யோ பா. பி. - பு. த. ப. ட. - பே. )

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்சிர பலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல தனவருமானம் வந்துக்கொண்டிருக்கும். வெள்ளைக்கல் பதித்த ஆபரணம் தரும். வாகன சுகம் திருப்தியளிக்கும். எல்லாக்காரியங்களும் அரசாங்ககெடியில் நடந்துக் கொண்டிருக்கும். தாரசௌக்கியம், புத்திரர்களின்சௌக்கியம் நன்றாக இருந்துவரும். மார்ச்சு 17, 18, 19, 20, 21, 24, 25, 29, 30 ஏப்ரல் 5, 6, 7, 8, 9 தேதிகளில் தனதாயாதி நற் பலன்களையளிக்கும். மார்ச்சு 14 ஏப்ரல் 10, 11 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

10. மகரம் :- உத்திராடம் ¾ - திருவோணம் - அவிட்டம்
( போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. கா. கி - )

மகர ராசி 9 பாதங்களும் சுபபலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் தனவருமானம் நல்ல விதத்தில் வந்து சேரும். மார்ச்சு 28உ ஆனால் புதிய ஒப்பந்தம் ஏற்படுதல் புத்திர விகிதங்களில் நல்லன வருதல் ஆகும். விடுவாகனங்களில் நல்ல சௌகரியம் இருந்துவரும். புத்திரிக்குச்சுபம் ஏற்படும். அல்லது பெண்மகவு ஏற்படும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும் மார்ச்சு 14, 21, 22, 23, 24, 27, 28, 31 ஏப்ரல் 1, 2, 7, 8, 9, 10, 11 தேதிகளில் தனதாயம், ஜெயம், சுபகாரியம் ஏற்படும். மார்ச்சு 15, 16 ஏப்ரல் 12 இத் தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

11. கும்பம் :- அவிட்டம் ½ - சதயம் - பூரட்டாம் ¾
( கு. கே, - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா. )

கும்பராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் தன வருமானம் கணிசமாக வரும். வித்துவத்துவம் கலைத்துறைகளில் அரசாங்க நன்மதிப்பு தரும். மார்ச்சு 21 தேதியிலிருந்து எல்லாக் காரியங்களும்தீவிர முயற்சியில்

நடந்துக் கொண்டிருக்கும். வாகன சுகம் திருப்தியளிக்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்து வரும். மார்ச்சு 14, 15, 16, 22, 23, 24, 25, 29, 30 ஏப்ரல் 3, 4, 9, 10, 11, 12 தேதிகளில் தனதாயம் காரிய ஜெயம், சுபம் ஆகிய விசேஷ பலன் தரும். மார்ச்சு 17, 18, 19 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

12. மீனம்:- பூரட்டாதி ¼ - உத்திரட்டாதி - ரேவதி.
( தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி. )

மீனராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்ப பிரச்சினைகளில் நல்லதும் நிலையை ஏற்படுத்தும். தனதாயம் தரும். சகோதரிக்கு அல்லது ஸ்திரீ வழியினரில் சுபம் ஏற்படும். மார்ச்சு 28 தேதிக்கு வித்தியா வியாபாராதிகளில் அல்லது உத்தியோகத்தில் ஓர் நற்பலன் வரும். நற்செய்தி கடிதங்கள் வரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். மார்ச்சு 15, 16, 17, 18, 19, 24, 25, 26, 27, 28, 31 ஏப்ரல் 5, 6, 12 தேதிகளில் தனதாயாதி நற்பலன்களையளிக்கும். அதிக தாமதத்தில் இருந்தவை கைகூடும். மார்ச்சு 20, 21 தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன் தரும்.

---

தருமையாதீனம்

## ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலக்ஷ்மி துர்க்காபரமேஸ்வரி ஆலய மகாமண்டபத் திருப்பணிக்குக்

## காணிக்கை செலுத்தியவர்கள் விபரம்

| | | |
|---|---|---|
| | 10—1—84 இதழ் முடிய முன் வரவு ...ரு. | 34,863 |
| 219 | திரு S. கோமதி அம்மாள் சிதம்பரம் ... | 250 |
| 220 | திரு V. R. கிருஷ்ணசாமி தரங்கம்பாடிரோடு மாயூரம் | 101 |
| 221 | திரு. க சுந்தர் S/O. K. கணபதி சேந்தங்குடி... | 11 |
| 222 | திரு. K. மாரிமுத்து கல்பாக்கம் ... | 6 |
| 223 | திரு. T. கிருஷ்ணமூர்த்தி & மீராபாய் மயிலாடுதுறை | 101 |
| 224 | திரு. P. V. S மணி B E., அண்ணாமலைபல்கலைக்கழகம் | 101 |
| 225 | பாபுலர் ஆட்டோமைபைல்ஸ், திருச்சிராப்பள்ளி | 1060 |
| 226 | திரு. வி.சா. குருசாமிதேசிகர் லால்பகதூர்நகர் மாயூரம் | 301 |
| 227 | திரு. புலவர் பெ. வேலு. தாரமங்கலம் ... | 10 |
| | ஆகக் கூடுதல் | 36,744 |

# செய்திகள்

## குருவருளும் அருளுபதேசமும்

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தை அன்பர்கள் வணங்கி வழிபட்டு அருளுபதேசம் பெறும் பிரார்த்தனை வழிபாட்டுக் கூட்டம் ஆங்கிலமாத முதல் ஞாயிற்றுக்கிழமைகளில் காலை பத்துமணிக்கு நிகழ்ந்துவருகின்றது. இம்மாதம் 4—3—84 அன்று 33 ஆவது வழிபாட்டுக்கூட்டம் நடைபெற்றது. அன்பர்கள் திருநீறுபெற்றணிந்து கூட்டுப்பிரார்த்தனை நிகழ்த்தினர். அடுத்துத் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தில் அருளுபதேசம் வழங்கியருளினர்கள்.

இம்மாதம் திருத்தொண்டர்புராணத் தத்துவச் சிந்தனையாக மூர்த்தி நாயனர் புராணம் உபதேசிக்கப்பெற்றது. திருநீறு, உருத்திராக்கம், சடாபாரம் என்ற மூன்றையும் முறையே அபிடேகமாகவும் ஆபரணமாகவும் முடியாகவும் கொண்டு இறையருள்வழி மும்மையால் உலகாண்டவர் மூர்த்தியார் என்பதைத் தத்துவச்செறிவோடு குருமணிகள் விளக்கினர்கள். உலகில் குறைவானதாக - இழிவு எனக் கருதிச் சொல்லப்படும் பொருள்கள், நிறைவானதாகவும் விளங்குகின்றன என்ற தத்துவத்தைச் சங்கு, சடைமுடி முதலியவற்றைக்கொண்டு அருளிய விளக்கம் மனத்தை நிறைவித்தது. இறைவனுக்குச் சந்தன நறும் பணிசெய்த நாயனர் தொண்டின்மாட்சியைப் பல்வேறு உலகியல் எடுத்துக்காட்டுக்கள்மூலமும், தக்க இலக்கிய மேற்கோள்கள் வாயிலாகவும், உளம்கொளுமாறு புலப்படுத்தினர்கள்.

மயிலாடுதுறை நகரப்பெருமக்களும் அன்பர்களும் கலந்துகொண்டு பயன்பெற்றனர். அடுத்த 34 ஆவது அருளுபதேசம் 1—4—84 அன்று நிகழ்வுறும். அன்பர்கள் கலந்துகொண்டு பயன்பெறுவார்களாக.

## திருபுவனத்தில் குருபூஜை விழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி தேவஸ்தானம் சந்நிதிவீதியில் உள்ள தருமையாதீனம் 17 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசக தேசிக சுவாமிகள் குருமூர்த்த ஆலயத்தில் குருபூஜைவிழா 10—2—84 அன்று மிகச்சிறப்பாக நடைபெற்றது. காலை மாலை இருவேளைகளிலும் விசேஷ அபிஷேக ஆராதனைகள்

நிகழ்த்தப்பெற்றன. நண்பகல் மாகேசுவரபூசையும், மாலை சமயப்பிரசாரமும் நிகழ்வுற்றன. குருவழிபாட்டில் அன்பர்கள் பலர் கலந்துகொண்டு பயன்பெற்றனர்.

## சென்னை தருமையாதீன சமயப்பிரசார நிலையத்தின் 300 ஆவது மாதாந்திரச் சிறப்பு வழிபாடு

நிலையத்தின் 300 ஆவதுமாதாந்திரச்சிறப்புவழிபாடு சென்னை சைதாப்பேட்டை ஸ்ரீ காரணீசுவரர் ஆலயத்தில் 26—2—84 ஞாயிறு அன்று நடைபெற்றது. காலை 11-00 மணியளவில் முறைப்படித் திருமுறைப் பாராயணத்துடன் ஸ்ரீ விநாயகர், ஸ்ரீ சுப்பிரமணியர், சுவாமி, அம்பாள் ஆகிய மூர்த்திகளுக்கு விசேஷ அபிஷேக ஆராதனை உச்சிக்கால பூஜையாக நடைபெற்றது. மாலை 4-20 மணியளவில் அர்ச்சனை வழிபாடுசெய்து, 5–30 மணிக்கு சமயச்சொற்பொழிவுக் கூட்டம் நடைபெற்றது. திருமுருக கிருபானந்த வாரியார் அவர்களும், திருமஞ்சக்குடி திரு. K. இராசகோபாலசாஸ்திரிகள் அவர்களும் மற்றும் பலரும் கலந்துகொண்டார்கள்.

சுவாமிகள் அனைவரையும் வரவேற்றுத் தருமை ஆதீனம் இயற்றிவரும் சமயப் பிரசாரப் பணிகளை விவரித்துக் கூறினர். திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள் பேசுகையில் "பதி, பசு, பாசம் என்ற தலைப்புக்களில் மக்கள் எல்லாம் பசு ஆவார்கள். இறைவன் ஒருவனே பதி ஆவான். விலங்கினங்கள் ஒரு கயிற்றுலும், இரு கயிற்றுலும், மூன்று கயிற்றுலும் கட்டப் பெறுகின்றன. மனிதப் பசுவாகிய நாம், ஐம்பெரும் கயிற்றுல் கட்டப்பெறுகின்றோம். ஊஞ்சல் நான்கு கயிற்றுல் கட்டப் பெறுகின்றது. அதனை அறுத்துவிட்டால், நிலத்தில்வந்து சேர்கிறது. அதுபோல, ஆன்மாக்கள் உலக வாழ்வை முடித்து விட்டால் இறைவனை அடைய முடியும். அதற்கு ஐம்பெரும் பாசக்கயிற்றை அறுத்துச் செல்ல உதவுவதே சமய வழிபாடாகும். இறைவன் சிவப்பு நிறம் உடையவன். பவழமும் சிவப்பு நிறமுடையது. இறைவனின் நிறத்தைக்கண்டு பவழம் நாணியது. பார்வதியும், பரமேசுவரனும் உரையாடும்போது இனியதேன் பார்வதியின்சொல்இனிமைக்குநாம்உவமையாவது ஒவ்வாது என நாணியது. நன்மையைச்செய்கின்ற சங்கரனின் திருமுடியில் மதி வளர்ச்சிபெற்றது. நம் மதியானது தேய்வு பெற்றது. வானோர்க்கும் ஏனோர்க்கும் எட்டாத பெருமானை நம் மனத்துள்ளே வைக்கவேண்டுமென்று கூறி, இதனை நான் கூறவில்லை; அப்பர் சுவாமிகள் தம் அருள்வாக்கால் சொன்னதையே சொல்கின்றேன்" என அப்பாடலையும் பாடினுர்கள்.

திருஞானசம்பந்த சுவாமிகள் தம்முடைய தேவாரத்தில் "என துரை தனதுரை" என இறைவன் இயக்க நாம் இயங்குகிறோம் எனச் சுட்டிக்காட்டியுள்ளார் என்றும், வள்ளலார் "நானுரைக்கும் வார்த்தைகள் நாயகன்தான் உரைக்கும் வார்த்தை" எனக் கூறி எல்லாம்வல்ல இறைவனே நம்மை இயக்குகிறான். அவ் வியக்கத்திற்கு தருமையாதீனம் செய்யும் தொண்டினை மக்கள் பயன்படுத்தி உய்யவேண்டுமென்று கூறித் தன்னுரையை நிறைவுசெய்தார்கள்.

திருமஞ்சக்குடி இராஜகோபால்சாஸ்திரி அவர்கள் பேசுகையில், "பசு மிகவும் சாதுவான பிராணி. அதனுடைய பெயரை மனிதனுக்கு வைத்ததைக் கண்டு பசுக்களே நாணம் அடைகின்றன. பசு தனக்கு ஒருவேளைக்குக்கிடைக்கும் உணவினை உண்டு நல்ல பாலைத் தருகின்றது. அடுத்தவேளை உணவை சேர்த்துவைத்துக்கொள்வதில்லை. மனிதனோ நிரம்ப சேர்த்து வைத்துக்கொண்டு இடர்ப்படுகின்றான். மனிதன் ஓடுகின்றான். பணத்தினை ஈட்டுகின்றான். உணவினை உண்கின்றான். மீண்டும் அச்செயலையே திரும்பவும் செய்கின்றான் என்பதைக் குறிக்கின்ற ஆங்கிலப் பழமொழியைக்கூறி, வாழ்த்த வாயும் நினைக்கமட நெஞ்சும் தாழ்த்தச்சென்னியும் தந்த இறைவனை, வழிபட்டுப் பயன் பெறுவதே மனிதப் பிறவியின் நோக்கமாகும். இந்தச் செயலினை நம் தருமை ஆதீனம் 25 ஆண்டுகளாக நடத்தி வருவது பாராட்டுதற்குரியதாகும். மேலும் இத்தொண்டு சிறக்க வேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன்" என்று கூறினார்.

திரு. என். ஆர். முருகவேள் அவர்கள் நிலைய மாத வழிபாட்டின் வரலாற்றினையும், அன்பர்கள் செய்த தொண்டினையும் பாராட்டி 25 ஆண்டுகளுக்கு முன்பு இம்மாத வழிபாட்டைத் தொடங்கிவைத்த இராஜாஜியினுடைய நல்லெண்ணத்தையும் பாராட்டிப்பேசினார்கள்.

திரு. C. செல்வநடராஜ முதலியார் அவர்கள் பேசுகையில் இந்தவழிபாட்டு எண்ணுகிய 300ல் மூன்று என்ற எண் பசு, பதி, பாசம் என்ற முப்பொருள் உண்மையை விளக்கும் வகையில் திருத்தருமையாதீனம் மக்களுக்குத் தொண்டுசெய்துவருவது பாராட்டத்தக்கது என்று கூறினார்கள்.

திரு. வி. என். ஆறுமுக முதலியார் பேசுகையில் நிலயம் தோன்றிப் பத்து ஆண்டுகளுக்குப்பிறகு தருமையாதீனத்தின் தொடர்பு தனக்குக் கிடைத்ததென்றும், அதன் வாயிலாக இறைபணி செய்வதையே தன் குறிக்கோளாகக் கொண்டதாகவும் சொன்னார்கள்.